# உங்கள் குடும்பம் சீருடன் வாழ்க

இயற்றியவர் :
*குண்டலினி சித்தர்*
*அமுதானந்த தவயோகி*

வெளியீடு
*ஸ்ரீ ராமகிருஷ்ண ஆத்மாலயம்*
*அன்னை ஸ்ரீ சாரதா அனாதை இல்லம்*
பதிவு எண் : 187/2000-01
இருளிப்பட்டு, சென்னை - 600 067.
(காரனோடை பாலம் அருகில்)
போன் : 911 55147 - 911 55397

# வீட்டின் நலம்

'நல்ல குடும்பம் பல்கலைக்கழகம்-என்பது பழமொழி. என்னதான் குடும்பத்திற்கு ஏராளமாக பணம் வந்தாலும் நிம்மதி இல்லையே-என்று பலர் ஏங்குவதைக் கேட்டிருக்கிறோம்! அற்பச் சிற்றின்பச் சந்தோஷங்கள் மட்டும் குடும்ப சந்தோஷமாகாது! அதற்கும் மேலான சந்தோஷங்கள் குடும்பத்திற்கு தேவை! குடும்பத்திலுள்ள அனைவரும் தினசரி மூன்றுவேளை கடவுளைப் பிரார்த்திக்க வேண்டும். இதனால் மேலான சந்தோஷம் சீராகக் கிடைக்க வாய்ப்பு உண்டாகிறது!

எதுவுமே நிலையில்லாத வாழ்க்கையில் எப்போதும் துன்பம் துயரம் ஏந்திக் கொண்டா வாழ வேண்டும்? இது வாழ்க்கையல்ல! நிம்மதியாக-இருந்தாலும் இல்லாவிட்டாலும் சந்தோஷமாக வாழும் வாழ்க்கைதான் உண்மையான வாழ்க்கை! இந்த வாழ்க்கை அமைய ஒவ்வொரு குடும்பத்திலுள்ள அனைவரும் அதற்கான முயற்சியில் ஈடுபடவேண்டும்.

பக்தி-நற்பண்பு-நற்செயல் இவைகள் ஓரளவு குடும்பத்தில் நலம் விளைவித்தாலும் பிறபல சாஸ்திர சம்பிரதாயங்களினால் தான் மெத்த அதிகமான குடும்ப நலம் உருவாகிறது! சாஸ்திரங்களிலும் வேதங்களிலும் புராணங்களிலும் இது விபரமாகச் சொல்லப்பட்டுள்ளது!

ஒரு குடும்பஸ்தன் வீடு கட்டுகிறான் என்று வைத்துக் கொண்டால் அது சாஸ்திரபடி-ஆகம விதிகளின்படிக் கட்டாயம் கட்டப்பட வேண்டும்! இல்லையென்றால் எத்தனை செல்வம் இருந்தாலும் அது வீணாகப் போய்விடும்! விபரிதமான காரியங்கள் அடிக்கடி குடும்பத்தில் நடந்து குடும்பம் குலைந்து அழிந்து போகும்.

முக்கியமாக குடும்பநலம் பாதிக்கக் காரணமாய் இருப்பது கட்டிய வீடுதான்! வாஸ்து சாஸ்திரப்படி வீடு கட்ட வேண்டும். வீடு கட்டுவதற்கு முன்பும், பின்பும், கட்டிக்

கொண்டு இருக்கும் போதும் இஷ்ட தெய்வம் பேரில் ஹோமம் பூஜை நடத்த வேண்டும்! இவ்வாறு செய்தால் அதிகச் செலவு-அகலக்கால் வைத்து அவஸ்தைப்பட வேண்டிய சூழ்நிலை உருவாகாது! வீட்டைக் கட்டிப்பார் விபரிதமாகச் செலவுகளை-என்று பழமொழி சொல்ல வேண்டியதும் வராது!

வாஸ்து சாஸ்திரக் குருக்களை அழைத்துத் திட்டமிட்டு-பூமி பூஜை நடத்தி வீட்டுவேலை தொடங்க வேண்டும். தற்போதுள்ள கட்டிட பொறியாளர்கள் வாஸ்து பார்ப்பதில்லை; சாஸ்திர சடங்குகளைப் பின்பற்றுவதில்லை. இதனால் ஒரு ரூபாய் செலவுக்குப்பதில் ஒரு கோடி ரூபாய் செலவு அதிகமாகிறது!

கர்வமிக்க பக்தியற்ற இஞ்ஜினியர்கள் கலிகாலத்தில் பெருகிவிட்டார்கள். அதனால் சாஸ்திர சம்பிரதாயங்களைப் புறக்கணித்துவிட்டு ஏனோ-தானோ-என்று வீடுகளைக் கட்டி-மேல் நாட்டு அழகில் பாவங்களை விதைக்கிறார்கள்! பக்திமிக்கவர்கள் வாஸ்து சாஸ்திரத்துக்குக் குறைவராமல்-வாஸ்து முறைப்படி வீடுகளை கட்ட வேண்டும்! மேலைநாடுகள் பல இன்று வாஸ்து சாஸ்திரங்களைப் பயன்படுத்திக் கட்டிடங்களைக் கட்டுகிறார்கள்! இதனால் குறையின்றி வாழ்கிறார்கள்! வாஸ்து தேவர் வாழும் இந்திய தேசத்தில் வாஸ்து பகவானை அவமதிக்கிறார்கள்! இதனால் பல குடும்பத்தினர் கஷ்டப்படுகிறார்கள்!

குடிசை வீடே கட்டினாலும் வாஸ்து முறைப்படிதான் வீடு கட்டவேண்டும்! வாஸ்து முறைப்படி இலங்கை நாட்டின் அமைப்பு இல்லாததால் தான் அங்கு எப்போதும் சண்டை நடந்து கொண்டிருக்கிறது! காஷ்மீரிலும் எப்போதும் கலவரம் நடந்து கொண்டிருக்கிறது! காஷ்மீர் மாநிலத்தின் அமைப்பும் வாஸ்து சாஸ்திர முறைப்படி அமையவில்லை! இதே போல் அண்டைநாடான பாகிஸ்தானின் அமைப்பும் வாஷ்து முறைப்படி அமையவில்லை. அதனால் உலகமே சிரிக்கும் அளவில் அங்கே சர்வாதிகாரமும் சண்டை சச்சரவுகளும் நடந்த வண்ணம் உள்ளன!

வாஷ்து பூஜை செய்து-வாஷ்து முறைப்படி கட்டாத வீட்டில் குடும்ப நலம் பெறுவது கஷ்டமான ஒன்று! இங்கே குழப்பமும் பிரச்சனைகளும் இருந்தபடியே இருக்கும்! தற்போது அளவுமுறைகளை-அதாவது வீடுகட்ட ராசியான அளவு-பல குறிப்பேடுகளில் (டைரிகளில்) பலவிதமாகப் போட்டு வருகிறார்கள். இவைகளைப் படித்துவிட்டு வீடுகட்டிக் கொண்டவர்களும் நிம்மதியில்லாமல் தவிக்கிறார்கள்! இதுபோல் குறிப்பேடுகளைப் பார்த்து மனை அளவு எடுத்து வீடுகளைக் கட்டிக் கொள்வதும் சரியன்று! வாஷ்து சாஸ்திரிகளைத் தேடி-பூஜை செய்து அந்த முறைப்படி அளவிட்டு வீடுகளும் அறைகளும் கட்டிக் கொள்ள வேண்டும்! போலியான-அரைகுறை வாஷ்து சாஸ்திரிகளையும் நம்பிவிடக்கூடாது!

வாஷ்து முறைப்படித்தான் ஒவ்வொரு மனிதனுக்கும் மனிஷிக்கும் அளவுமுறைகளை இறைவன் அளித்துள்ளார்! இது அவரவரின் அதிஷ்ட-விதி எண்களின்படி அமைகிறது. இந்த எண்களைப் பயன்படுத்தியும் வீடுகளுக்கு அளவுபோட்டு கட்டலாம்! சான்றாக-15ம் தேதி பிறந்த ஒருவர் 15 அடி நீளமோ அகலமோ வைத்தும்-பிறந்த தேதி-மாதம் வருடங்களைக் கூட்டினால் கிடைக்கும் விதி எண்ணைக் கணக்கில் கொண்டும் வீட்டளவு போட்டு வீடு கட்டலாம்! குறிப்பாக-ஹாலுக்கு (அகண்ட அறைக்கு) விதி எண்களைப் பயன்படுத்தலாம்! சான்றாக-32 விதி எண் என்று வைத்துக் கொண்டால் இதன் கூட்டு எண் 5 ஆகிறது. ஐந்து எண் வரும்படி வீடு கட்டலாம்! கூட்டு எண் 5 வரும்படி எவ்வளவு பெரியதாகவும் ஹால் அமைக்கலாம்! இது வாஸ்து சாஸ்திரத்துக்கு ஒத்துவரும்! வளமான வாழ்வுக்கு உதவவும் செய்யும்! இதில் இன்னொரு விஷயம் என்னவென்றால்-மனைவிக்கும் கணவனுக்கும் ஒத்துப் போகிறமாதிரி அந்த எண்கள் அமைய வேண்டும். அப்படியானால் தான் இருவரும் ஒத்துபோக முடியும்! இல்லையென்றால் சண்டை சச்சரவு பிரச்சனை தான்!

இந்த முறையில் இருவரின் எண்களும் ஒரேமாதிரி-சாஸ்திரங்களுக்கு ஒத்தமாதிரி இருந்தால் அந்த வீட்டில்

மகிழ்ச்சிக்குக் குறைவில்லை! இது பொருத்தமாக வராதபோது வாஸ்து முறைப்படி அளவுபோட்டுத்தான் வீடு கட்டியாக வேண்டும்! வீட்டின் வாசல் கதவு எல்லாரின் ராசிக்கும் கிழக்குத் திசைதான் ஏற்றது! கிழக்கில்லாமல் வேறு எந்தத் திசையில் வீட்டு வாசல் இருந்தாலும் அதனால் நிம்மதி குலையும்! தெற்குத் திசையில் வாசல் இருப்பதால் கடன்கள் கூடும்! சண்டைச் சச்சரவுகளும் பெருகி சங்கடங்கள் நிலைக்கும்.

மேற்குத் திசையில் வாசல் இருந்தாலும் தீராத பிரச்சனைகள் இருந்தபடியே இருக்கும். நினைத்த காரியம் தடைபட்ட மாதிரியே இருக்கும். வடக்குத் திசையை நோக்கி வாசல்படி வைப்பதால் வருமானப் பாதிப்பு இருக்கும் எவ்வளவு வந்தாலும் போதாது! இதனால் எலியும் பூனையும் சேர்ந்து வாழ்வது போல் குடும்பத்தில் ஏகப்பட்ட குழப்பங்கள் நிகழும்.

வீட்டுக்கு ஜீவ நாடியாய் இருப்பது வாசல்படிதான்! இது சரியாக அமையவில்லையென்றால் எல்லாமே சரி இல்லாதது போல்தான் தெரியும்! பெரும்பாலும் நல்ல சாதி மரங்களைத் தேர்ந்தெடுத்து வாசல்கால்கள் போடவேண்டும்; கதவு அமைத்துக் கொள்ள வேண்டும்! கனமான பலகைகளில்-கலையம்சங்கள் நிறைத்துக் கதவு உண்டாக்க வேண்டும்! சிக்கனத்திற்காக மோசமான-தரித்திரம் உண்டாக்கும் மா, வேம்பு தைலம் போன்ற சில மட்டமான காட்டு மரங்களில் கதவுகள் ஜன்னல்கள் அமைத்துக் கொள்ளக்கூடாது! கதவு வாசல்களுக்காக மொத்தச் செலவில் கால்பங்கு ஒதுக்க வேண்டும்! வீடு கட்டுவதற்குரிய செலவில் கால்பங்குச் செலவை ஒதுக்கி கதவு-ஜன்னல்களுக்கு தரமான மரப் பலகைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்!

இதுபோல் வீட்டுக்கு வண்ணங்கள் தீட்டும்போதும் ராசி நிறம் பார்த்துப் பூச வேண்டும்! கணவன் மனைவி இருவருக்கும் பொருத்தமான நிறத்தைத் தேர்ந்தெடுத்து வண்ணம் பூச வேண்டும். கறுப்பு-கறுப்பு நீலம் போன்ற வண்ணங்களைப் பயன் படுத்தக்கூடாது! கறுப்பு துன்பத்தின்

அடையாளம்! ஓயாத கவலையில் பிரச்சனையில் சிக்கி எப்போதும் கறுப்புத்துணி அணிபவன் தவிப்பதை நினைவில் கொள்ளுங்கள்! கறுப்புச் சட்டைக்காரன் துக்கத்துக்குக் கெட்டிக்காரன்-என்ற புதுமொழி உண்டாகும் அளவில் கறுப்புச் சட்டைக்காரன் இருளில் கிடப்பதை பலரும் அறிவார்கள்!

வக்கீல்கள் கூட-நீதிமான்கள் கூட கறுப்புக் கோட்டு-அணிவதை மாற்ற வேண்டும். இந்தப்பழக்கம் வெள்ளைக்காரர்கள் ஆண்ட காலத்திலிருந்து தொடர்கிறது! கறுப்பணிவதால் நீதியைப் பலர் இருட்டில் போட்டு மூடுவதை மறுக்க முடியாது. கறுப்பு அணிவது வெறுப்பு வளர்த்துக் கொண்டதுக்குச் சமம்! நீதிபதி வக்கீல்கள் நிலமை இந்த நிலமையில் தான் இன்றைக்கு இருக்கிறது என்பது உண்மையாகும்!

கறுப்புக்குப்பதில் மஞ்சள்-சந்தனம் போன்ற நிறங்களை நீதி அரசர்களும் வக்கீல்களும் எடுத்துக் கொள்ளலாமே? கறுப்பு நிறத்தில் துணி அணிவதால் போர்த்திக் கொள்வதால் உடலில் அதிகமான சூடு ஏற்படுகின்றன என்பதும் உண்மையாகும்! மொத்தத்தில் கறுப்பு வேண்டாம்! டார்க்கான-திக்கான வண்ணங்ளையும் சுவர்களுக்குப் பயன்படுத்தக்கூடாது! கதவுகளில் வண்ணங்கள் தீட்டுவது சரியல்ல. அவைகளில் வாசனை எணணெய்த் தேய்த்துத்தான் அழகுபடுத்தபட வேண்டும். நமக்கு எந்தக் கலர் ராசியோ அந்தக் கலரைப் பயன்படுத்துவது சந்தோஷ வாழ்வுக்கு நல்லது! சுவர்களிலும் உங்களுக்கு விருப்பமான பொருட்களிலும் ராசி நிறத்தில் வண்ணம் தீட்டியும் வாஸ்துபடி வீடு கட்டியும் சந்தோஷமாக வாழுங்கள்!

## தான் வாழ தானம் செய்

வீடு கட்டித் திறக்கும் போதும், வீட்டின் விசேஷ காலங்களிலும் தானம் அளித்து மகிழுங்கள். தானமளிப்பதால் உங்களுடைய ஞான நரம்புகள் விழிப்படைகின்றன. இன்று

அவர்க்குக் கொடுத்தால் நாளை அவர் நமக்களிப்பார்-என்ற எண்ணத்தோடு தானமளிக்காதே-என்று திருவள்ளுவர் கூறுகிறார்! தானமளிப்பதால் பீடைகள் விலகுகின்றன. நோய்கள் மறைகின்றன. முன் ஜென்மப் பாவங்கள் மறைகின்றன. கடன்கள் பிரச்சனைகள் படிப்படியாகக் குறைகின்றன!

மனநிம்மதியும், மூளைவளர்ச்சியும் ஏற்படுகின்றன. கணவன் மனைவிக்குள் ஒற்றுமை உண்டாகின்றன. அன்பு கூடுகின்றன. பிள்ளைகள் பெற்றவர்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பார்கள்! பெரியவர்கள் வாக்குவாதம் பண்ணாமல் அனுசரித்து நடப்பார்கள்! மலை போன்ற பிரச்சனைகள் மனைவாசல் வரை வந்து திரும்பிப் போய்விடும்!

அடிக்கடித் தானமளிப்பதால் அறிவு வளர்ச்சி ஏற்படுகின்றன. பகைவர்கள் உறவாளி ஆவார்கள்! ஒரு சிறு தானமளித்து ஓராயிரம் நன்மைகளைப் பெறலாம்! தான் நலமடைய தானம் செய்-என்று தான் பழைய நூற்கள் எடுத்துக் கூறுகின்றன. இதற்குமுன்னால் உள்ள-கிருதாயுகத்தில் மகாதவம் செய்து இறைவனை அடையலாம் என்றிருந்தது.

ஒற்றைக்காலில் பல ஆண்டுகள் இறைவனைப் பிரார்த்தித்தபடி இருப்பது மகாதவம் என்று சொல்லப்படுகிறது. உட்கார்ந்தும் புற்று மூடுகின்ற அளவில் தவத்தில் ஈடுபடுவார்கள். கௌதம புத்தரும், வால்முகி மாமுனிவரும். ராவணனும் பல கோடி அரக்கர்களும், தவமா முனிவர்களும் இதுபோல் தவம் செய்து-மஹாதவம் செய்து மஹாயோகி ஆகி இருக்கிறார்கள்.

அடுத்துவந்த திருதாயுகத்தில் தியானம் செய்யச் சொல்லி இருக்கிறார்கள்! மந்திரமோ தந்திரமோ எதுவும் நினைக்காமல்-இறைவன் உருவத்தையே நினைவில் கொண்டு தியானத்தில் அமர்ந்திருப்பது தியானமாகும்! மழை குளிர் வெயில்-பிற உயிர்களால் ஆபத்து-போன்ற எதைப்பற்றியும் கருதாமல்-சித்துசிறிதுகூட இறைவனை வேண்டாமல் இறைவனாவதும் இறைவனை அடைவதும் மட்டும் குறியாகக்

கொண்டு தியானத்தில் திரிதாயுகத்தில் யோகியர் அமருவர். புகழ் பெற்ற பல ரிஷிகள் இதுபோல் தியானத்தில் ஈடுபட்டு புகழ்ப்பெற்ற கதைகள் புராணங்களிலும், இலக்கியங்களிலும், நீதி நூற்களிலும் கூறப்பட்டுள்ளன!

அடுத்துவந்த துவாரயுகத்தில்-யாகம் செய்து-மந்திரங்களைப் படித்து இறைவனை அடையலாம் என்று சொல்லப்பட்டுள்ளது! பல முனிவர்கள் இதையே செய்து சித்திகளைப் பெற்று-பல அரசர்களுக்கும், குடிமக்களுக்கும் நன்மைகளைச் செய்திருக்கிறார்கள்! பல உயிர்களுக்கும் துவார யுகத்தில் பல மாமுனிவர்கள் நன்மைகள் செய்து பிறவிக் கடலிலிருந்து கரையேறி இருக்கிறார்கள்.

இப்போது நாம வாழும் கலியுகத்தில் தானம் தான் செய்ய வேண்டும்-என்று வகுக்கப்பட்டுள்ளது! தானம் செய்து எளிதாகக் கடவுளை அடையலாம் என்றே ரிஷிகள் வகுத்துக் கூறி இருக்கிறார்கள்! தானம் கலியுகத்தில் பெரிய தவமாக கருதப்படுகிறது! தானம் செய்து வள்ளலாய் இருந்தவர்கள் முக்தியடைந்து இறைவனை அடைந்திருக்கிறார்கள்! யாருக்குப் பிறவி இல்லை? யார் கடவுளாயிருக்கிறார்கள் என்று கேட்டால்-நல்ல குண சாலிகளுக்கும் எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதவர்களுக்கும், பிறர் துயர்கண்டு துன்பப்பட்ட விவேகானந்தர்-சாரதாதேவி-போன்றவர்களுக்கும் தான் பிறவி கிடையாது! நற்குணம் நிறைந்தவர்களையே இறைவன் விரும்புகிறார்; அந்த நற்குணம் தானம் செய்கின்றவர்களுக்குத் தாரளமாக வந்து சேருகிறது!

வரலாறுகளில் எவ்வளவோ வள்ளல்கள் இருந்துள்ளார்கள்! அந்த வள்ளல்களின் உயர்ந்த பண்புக்கு அவர்களிடமிருந்த சேவை மனப்பான்மையும், தர்ம உணர்வுகளும் தான் காரணமாகும்! கொடுப்பவன் வாழ்வில் துக்கம் கிடையாது! தானமளிப்பவன் வாழ்வில் தோல்விகள் கிடையாது! ஒருவரின் பசித்துயரை நீக்குவது உயர்ந்த யோகத்திற்கு சமம். சேவை செய்பவர்கள் இறைவனைத் தேடிப்போக வேண்டாம். அவரே நம்மைத் தேடி வருவார். இதற்குச் சான்றாக எத்தனையோ வரலாறுகள் உண்டு

எறும்பு போன்ற சிறு பிராணிகளுக்குத் தானமளிப்பதால் அவைகள் கூட நம்மை வாழ்த்தும்; நமக்காகக் கடவுளிடம் பிரார்த்தனை செய்யும்! முடிந்தவரைக்கும் ஒவ்வொருவரும் தானம் செய்ய வேண்டும்! குறிப்பாக குடும்பஸ்தர்கள் மனைவி மக்கள்-பெரியவர் களுடன் சேர்ந்து தானமளிக்க வேண்டும்! இதனால் குடும்பத்தில் குதூகலம் பெருகும்! குடும்பத்திற்குள் தெய்வமும் வந்து குடி இருக்கும்! நிறைய தானமளிப் பவர்களுக்கு ஆயுள் கூடும்! ஐஸ்வரியம் பெருகும்!

நீ பட்டினி கிடப்பதானாலும் பரவாயில்லை. உன் கையுள்ள ஒரு கவளம் சோற்றைக்கூட ஏழைக்குக் கொடுத்துவிடு என்பது விவேகானந்தர் கருத்தாகும்! நீ சொர்க்கத்தைத் தேடிப் போக வேண்டாம்; ஒதுக்கப்பட்ட-உணவு துணிகளுக்கு கஷ்டப்படும் ஏழைகளின்-தரித்த ஆண்டிகளின் இருப்பிடம் தான் உனது சொர்க்கமாகும் என்பதை மறவாதே என்பதும் விவேகானந்தர் கருத்தாகும்.

த+னம் = தானம்! தானம் என்ற வார்த்தை தா-நம்-நமக்குத்தா! என்பது போல் பொருள்படுகிறது! மற்றவர்க்குத் தானமளிப்பதால் நமக்கு இறைவன் தருகிறார்-என்ற பொருள் இந்த வார்த்தையிலேயே இருக்கிறது. தானம்-செய்பவர்களுக்கு அந்தத் தானத்தில் ஏராளமான நன்மை இருக்கிறது என்பதை தானம் என்ற வார்த்தையே நிருபிக்கிறது!

குடும்பத்தினர் அனைவரும் சேர்ந்து இல்லாதவர்களைத் தேடிப்போய் தானமளித்து மகிழ வேண்டும். வசதி உள்ளவர்களுக்குக் கொடுப்பது தானமாகாது! வறியவர்களுக்கு ஒன்று ஈவதே ஈகையாகும்! சிறந்த தானமும் ஆகும்!

வீட்டிலுள்ள நிரந்தர மகிழ்சிக்கு நீங்கள் அளிக்கும் தானமும் தொண்டும் முதலிடம் வகிக்கின்றன! தான பலன்கள் வீட்டின் பூஜையறையில் வாசம் செய்யும்! பொருள்கள் சேர்த்து வைத்துள்ள பெட்டிகள் பாத்திரங்களிலும், சமைக்கும்

இடங்களிலும், சாப்பிடும் இடங்களிலும் இதன் அருளாசி பொழிந்தபடி இருக்கும்! வீட்டில் தர்மம் தழைப்பதற்காக- "பஞ்சகச்சம்" என்னும் தர்ம ஆடையை-அதாவது தர்ம-தேவதைக்குப் பிடித்தமான ஆடையை வீட்டிலுள்ள அனைவரும் அணிய வேண்டும். "ஸதாசாரம்" என்ற பழைய சாஸ்திர நூல் ஒன்று இதுபற்றி விரிவாகக் கூறுகிறது "கச்சம்" அதிகம் தொங்காமல் அம்சமாக பெண்களும் ஆண்களும் ஆடை அணிவது தர்மத் தேவதைக்குப் பிடித்தமான ஒன்று! இம்மாதியான ஆடையை குறிப்பிட்ட வகுப்பினர் தான் அணிய வேண்டும் என்று விதி இல்லை! இதை எல்லா இனத்தவரும் சமயத்தவரும் அணியலாம்! வீட்டின் மகிழ்ச்சிக்கு இந்த "பஞ்சகச்சம்" ஆடைகள் குருவாக விளங்குகின்றன (இன்றே முயன்று-இதை ஆரம்பிங்களேன்.)

## பில்லி சூனியம் விலக

மந்திரங்களை வீட்டில் யாராவது ஒருவர் படித்தபடி இருக்க வேண்டும். சத்தமாக படிக்க வேண்டும். நடந்தபடி எல்லாமனையிலும் மந்திரம் விதைப்பதுபோல் படிக்கலாம். இதுபோல் மந்திரம் படிக்கும் வீட்டில் பேய் பிசாசுகளோ-காற்றுக் கறுப்புக்களோ அண்டாது! வீட்டின் சாக்கடை தேங்கும் இடங்களிலும் அழுக்குப்படிந்துள்ள இடங்களிலும் அசுத்தமான இடங்களிலும் கெட்ட துஷ்ட ஆவிகள் வாசம் செய்யும். பெண்கள் அசுத்தமாய் இருக்கும் நேரங்களிலும், ஆண்பெண் கூடி அசுத்தமான சமயங்களிலும் இவர்களை ஒட்டிக்கொண்டு காற்றுக் கறுப்புகள் சைத்தான்கள் வீட்டிற்குள் புகுந்துவிடும்.

அதனால் இதுமாதிரி சமயங்களில் இரவு எந்த நேரமனாலும் ஆண்பெண் இரு பாலரும் குளித்து விடுவது நல்லது. குளித்த பின்பு-அது எந்த நேரமானாலும் சிறிய அளவு பசியாற்றிக்கொண்டு இறைவன் நாமத்தைப் பாடியபடித் தூங்கலாம். அப்படியே கிடந்து-அசுத்தங்களுடன் கைகால்கள் கூட அலம்பாமல் தூங்குவது ஐந்து பத்து நாட்களுக்கு தொடர்ந்த நஷ்டம் கஷ்டம் உண்டாக்கும். செலவும்

சிரமமும் நோயும் கடனும் குடும்பத்தை உலுக்கும்! இந்த விஷயத்தில் ஏனோதானோ என்று நடந்து கொண்டால்-தானாய் போன பீடையை பிடித்துத் தலையில் அமர்த்திக் கொண்டதுபோல் தான்! என்பதை மறக்க வேண்டாம்!

இறந்த வீட்டில் ஒன்பது நாட்களுக்கு உயிர் விட்டவர் இடத்தில் விளக்கேற்றி வைக்க வேண்டும்! அல்லது மூன்று தினங்களுக்காவது விளக்கேற்ற வேண்டும்! தான தருமங்கள் பதினாறு நாட்களுக்குச் செய்து வரவேண்டும். தடபுடல் விருந்துகளைத் தவிர்க்க வேண்டும்! இறந்தவர்க்கு விருப்பமான பலகாரங்களைச் செய்து இறந்தவரின் பெயரைச் சொல்லி அர்ப்பணம் என்று கூறியவாறே ஏழைகளுக்கு தானமளிக்க வேண்டும்! இறந்தவரின் நெருங்கியவர்களும்-உறவினர்களும் முப்பது நாட்களுக்கு ருசியான விருந்துகள் புசிப்பதை விடுக்க வேண்டும்! இறந்தவரின் ஆவி சூனியம் போல் தீயகாரியங்கள் செய்து விடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்! அதற்கு மேற்சொன்னவற்றைப் பின்பற்ற வேண்டும்.

இறந்தவர் வீட்டில் முப்பது நாட்களுக்குள் சந்தோஷத்தில் (சிற்றின்பத்தில்) ஈடுபட்டால் அந்த இறந்தவரின் சாபம் உங்களை உண்டு இல்லை என்று பண்ணிவிடும் ஜாக்கிரதை! இறந்தவர் இருந்த வீட்டில் மஞ்கள் சந்தனம் மருதாணி துளிர், எலுமிச்சை இலைத் துளிர்-வில்வ இலை, துளசி இலை, நொச்சில் இலை, வேப்பிலை போன்றவற்றை அறைத்து நீரில் கரைத்து வீடு முழுதும்-மனை முழுதும் தெளித்துவிட வேண்டும். மூன்று நாள், ஒன்பது நாள் என்று பதினாறு நாட்கள் வரை கூடத் தெளிக்கலாம்!

இறந்தவரை-நல்ல குணசாலிகளாக இருந்தால் அவர்களை வணங்கலாம். இதனால் ஏராளமான நன்மைகள் உண்டாகும்! கோற மரணமடைமந்து இறந்தவர்களையும், தவறான பழக்க வழக்கங்களினால் இறந்தவர்களையும் வணங்க வேண்டியதில்லை. அவர்களின் நினைவுநாள் அல்லது பிறந்த நாளில் ஏழைகளுக்குத் தானமளிக்கலாம்!

இறந்தவர்கள் கோபப்பட்டால்-வீட்டிற்குள் ஒன்று மாற்றி ஒரு கஷ்டம் வந்தபடி இருக்கும்!

சில துஷ்ட ஆவிகள் வீட்டை விட்டு போகாது. இவைகளை ஓட்ட சில சாஸ்திர சம்பிரதாயப் பொருட்களால் தான் முடியும்! படுக்கும் போது விளக்குமாறு-பிய்ந்த தோல் செருப்பு இரும்பு கத்தி சுத்தி கடப்பாறைகளை வாசலில் போட்டு வைத்துக் கொண்டு, படுக்கலாம்! எதிரிகள் பில்லி சூனியங்கள் ஏவல்கள் அகல கீழ்க்கண்ட மந்திரங்களை காலை மாலை மதியம் என்று மூன்று வேளையும் பாராயணம் செய்யலாம்!

“பீநஸஷ் வாஸ காஷக் நீ<br>பிக்ஷா சோபாதி மோசி நீ<br>விவாத ஷமநிலோக பாதா<br>பஞ்சக நாஷி நீ”

இதனால் வீட்டில் மகிழ்ச்சி உண்டாகும். குதூகலம் நிலைக்கும்! அடிக்கடி வீட்டில் சாம்பிராணியில் மருதாணி இலை கலந்து (காய்ந்த இலையில்) புகை போடலாம். வீட்டு வாசலில் மருதாணிச் செடி வளர்ப்பதும் நல்லது! ஓமச் செடிகளையும் வளர்க்கலாம்! ஓமத்தை துர்க்காதேவிக்கு அர்ச்சனை செய்து-அதை-வீடு-மனை முழுக்க சிறிதுசிறிதாக இறைக்கலாம். “ஓம்தும் துர்க்காயை நம”-என்று கூறியபடி இந்த ஓமத்தைத் தூவி இறைக்க வேண்டும்!

மஹாமுனி விஸ்வாமித்திரர் கீழ்க்கண்டவாறு உபதேசித்துள்ளதையும் பின்பற்றலாம்! ஆயிரமோ-லட்சமோ-மகிழம்பூ வைத்துக் கொண்டு சுதர்சன மந்திரத்தை கூறியவாறு தொடுக்க வேண்டும். பின்னர் இந்த மாலையை நரசிம்மருக்கு மாலையாக அணிவிக்க வேண்டும். இவ்வாறு தொடர்ந்து செய்து வர-எதிரிகளாலோ-பில்லி சூனியத்தாலோ-ஏவலாலோ எந்தத் துன்பமும் நேராது. அப்படி முன்பே நேர்ந்திருந்தாலும் அவை நீங்கி விடும். விஸ்வாமித்திர மாமுனி உரைத்த எளிய வழியை எல்லா குடும்பத்தாராலும்

கடைபிடிக்க பின்பற்றமுடியும்! குடும்பத்திலுள்ள அனைவரும் இப்பூஜையைச் சேர்ந்துபண்ணுவதால் மிகவும் விசேஷமாகும்!

முக்கியமாக வீட்டில் மந்திர ஒலி கேட்டபடி இருக்கும் படிப்பார்த்துக் கொள்ளுங்கள்! மந்திர ஒலி மனை முழுதும் பரவி தீய சக்திகளை அழித்தொழிக்கும்!

## எண்ணை தேய்த்துக் குளிக்காதே

அநேக குடும்பங்கள் கஷ்டப்படுவதற்கு அந்த வீட்டிலுள்ளவர்களில் பலர் கெட்ட பழக்கமுள்ளவர்களாக இருப்பதும் காரணமாகும்! மது-சூது போன்றவற்றைத் தினசரி எந்த ஆண் அருந்துகிறானோ அந்த வீடு உருப்படாது. உருப்பட்டதாக வரலாறும் கிடையாது! இதுபோல் தாம்பூலம் அடிக்கடி மெல்லும் வீடும் புகையிலையை எப்போதும் வாயில் குதப்பிக் கொண்டிருக்கும் வீடும் உருப்படாது.

மாடுகளைப்போல் மென்று கொண்டிருப்பது மனிதப் பண்பில்லை. பொது இடங்களிலும் அலுவலகங்களிலும் வாயில் எதையாவது போட்டுமென்று கொண்டிருப் பதென்பது சரியான மிருக புத்தியாகும்! இதனால் கண் திருஷ்டியும் வெறுப்பும் பகையும் சண்டையும் விரோதமும் பெருகும்! வெற்றிலை தாம்பூலத்துடன் குடும்பத்தின் ஒற்றுமையும் சேர்த்து மென்று விழுங்க வேண்டியது வரும்.

பாக்கு-புகையிலை எப்போதும் மெல்லுவதால் உடலில் மலட்டுத் தன்மை உண்டாகி-சோர்வும் களைப்பும் சோம்பலும் ஏற்பட்டு முன்னேற்றம் தடைபடும்! வாயில் சொற்கள் சரியாக உச்சரிக்க வராது; பேச்சுத் தடுமாறும் மக்களில் பலர் இவர்களை ஒரு கிண்டல் பொருளாக எடுத்துக் கொள்வார்கள்! எப்போதாவது சாப்பிடவேண்டிய தாம்பூலத்தை எப்போதும் போட்டு மென்று கொண்டிருப்பது மாட்டுக்கு நிகரான புத்தியாகும்!

பீர்-பிராந்தி, ஒயின் சாராயம் என்று பலவகை மதுக்களை அடிக்கடி ஆண்கள் உபயோகிப்பது வீட்டிற்கு

நிரந்தரதுக்கத்தை உண்டாக்கும்! மதுக்குடிக்கு அடிமையான பலர் வீட்டில் சந்தோஷத்தைப் பார்க்க முடியாத நிலைதான் ஏற்படுகிறது. சிலர் கண்களுக்கு மேலே உள்ள புருவத்தை வெட்டி ஒழுங்கு பண்ணிக் கொள்கிறார்கள்! இது மாபெரும் தவறு என்பது மஹா ஞானி விஸ்வாமித்திரரின் கருத்தாகும்!

கண்கள் பகுதியில் எந்த ஆயுதமும் படக்கூடாது என்பது சாஸ்திர விதியாகும்! இப்படிச் செய்வது பல தேவதைகளின் சாபங்களுக்கு ஆட்பட வேண்டியதிருக்கும். மனித உடலின் ஒவ்வொரு உறுப்புக்களுக்கும் ஒவ்வொரு தேவதை பொறுப்பேற்று கொண்டுள்ளது! பல ஆயிரக்கணக்கான தேவதைகள் இரத்தம்-எலும்பு-நரம்பு-மூளை-வயிறு தொப்புள் என்று பல உறுப்புக்களையும் காத்தருள் புரிந்து வருகிறது.

முடிவளர்வதற்கு சாங்க்யா வித்தகி என்ற தேவதை அருள் புரிந்து வருகிறது! இந்த தேவதையின் அருள் இருந்தால் தான் முடிகளால் எந்த தோஷமோ-ஆபத்தோ-உயிர்ச் சேதமோ ஏற்படாதிருக்கும். சாங்க்யா வித்தகி தேவதையின் ஆசி வேண்டுமானால் புருவ முடியை வெட்டுதல் கூடாது! இத்தேவதை கண்களைக் கவசமாய் இருந்து காத்து வருகிறது! புருவத்தின் நடுப்பகுதிக்கு மேலுள்ள நெற்றியில் இத்தேவதை வாசம் செய்து வருகிறது. இதன் வெறுப்புக்கு-சாபத்துக்கு ஆளாகாமல் இருக்க புருவ மத்தியில் கூரான ஆயுதங்களைப் பயன்படுத்த வேண்டாம்! இந்தத் தேவதை சபித்தால் தலைமுடி மொத்தமாகக் கொட்டிவிடும்!

தலைமுடி தானாகக் கொட்டி மொட்டையானால் தரித்திரம் நம்மை அடிமையாக்கும்! மகரிஷி விஸ்வாமித்திரர் மேலும் கூறும் போது-ஒரு ஆணோ-பெண்ணோ அடிக்கடி எண்ணை தேய்த்துக் குளிக்கக்கூடாது என்று கூறுகிறார். இதனால் ஆயுள் குறையும் என்பது முனி ஞானியின் கருத்தாகும்! அப்படியே எண்ணை தேய்த்து குளித்தாலும் குளித்த பின்பு-முன்பு தேய்த்துக் கொண்ட எண்ணை-உடல் உறுப்பில் எந்த இடத்திலும் இருக்கக்கூடாது என்று

எச்சரிக்கிறார். இதன் காரணமாக தீய ஆவி உடலில் வந்து ஒட்டிக்கொள்ளும்; இப்படி தீய ஆவிகள் ஒட்டிக் கொண்டதும்-மனிதனுக்கு பயமும், விரக்தியும், வாழ்வின் மேல் வெறுப்பும்-அர்த்தமில்லாத கோபமும் உண்டாகிறது! இதனால் குடும்பம் குழப்பக்காடாக மாறி காய்ந்து போன செடிகொடிகளாகப் பட்டுப் போகவும் நேரும். வீட்டு மனை காலியாகி-பேய்களும் பிசாசுகளும் வீட்டின் மூலைகளில் தங்கிக் கொள்ளும்!

அடிக்கடி எண்ணை தேய்த்துக் குளிப்பதைவிட எண்ணைகளை உணவில் அதிகமாகச் சேர்த்துக் கொள்ளலாம். இதனால் உடல் அழகுபெறும் மெலிவு நீங்கும்! அதிக எண்ணை நெய்களாலும் ஆபத்து உள்ளது! பெண்கள் வெள்ளிக்கிழமைகளில் வாராவாரம் குளிக்கத் தேவையில்லை. அதேபோல் ஆண்களும் அடிக்கடி எண்ணை தேய்த்துக் குளிக்கத் தேவையில்லை. எண்ணைத் தலைக்குத் தேய்த்துக் கொண்டால் குறைந்த பட்சம் அரைமணி நேரமாவது ஓய்வெடுத்த பின்பு குளிக்கலாம். இதனால் சிறிது உடலுக்கு நன்மை கிடைக்கலாம். ஆனால் எண்ணை தேய்த்துக் குளிப்பது வீண் என்பதில் சந்தேகமில்லை! தினசரி தலைக்கு எண்ணை தேய்த்துக் கொள்வது மட்டும் போதும்!

## படுக்கை

படுப்பது-உடல் நலத்துக்கு நல்லது. தூங்கிச் சுகமடைவதால் ஆயுள் ஆராக்கியம் கூடுகிறது! ஏனோதானோ-என்று எப்படி வேண்டுமானாலும் எங்கு வேண்டுமானாலும் படுத்துத் தூங்கக் கூடாது! மெத்மெத்தென்று விரித்து படுத்துத் தூங்க வேண்டும்! வெறும் தரையில் படுத்துத் தூங்கக்கூடாது. கோரைப் பாயில் படுத்தும் தூங்கக்கூடாது. பாயில்தான் படுக்க வேண்டியது உள்ளது என்றால் பாயின்மேல் பருத்தி வெள்ளைத் துணியை விரித்து அதில் படுத்துத் தூங்கலாம். தர்ப்பை-மான்தோல்-பஞ்சு

மெத்தை போன்றவைகளிலும் வெள்ளைத் துணி விரித்துத் தூங்கலாம்!

துறவிகள் இதில் அதிகக்கவனம் செலுத்த வேண்டும். வெறும்தரையில் படுப்பதோ அமருவதோ கூடாது! யோகிகளின் தவசக்தி காந்தசக்தி நிறைந்த பூமி சக்திக்குள் அடைக்கலமாக கூடாது! வெறும் தரையில் விரிப்பின்றி உட்கார்ந்தால் படுத்தால்-யோக பலன் குறையும்! பருத்தி-இலவம் பஞ்சுகளாலான மெத்தைகளில் தான் யோகிகள் தூங்க வேண்டும்! என்றால் சக்தி விரயமாகாது! கோரப் பாய்கள்-கம்பளிகள்-நைலான்-பிளாஸ்திக் போன்ற விரிப்புகளால் ஆனபடுக்கையில் படுப்பதால் யோகி போகியாக வாய்ப்புகள் உண்டாகும்! சக்தி இழப்பு துறவியின் முகத்தில் கரிப்பூசிவிடும் என்பதை அறியவும்!

குடும்பஷ்தன் சக்தி தேவிகளின் கோயில்களிலோ, சிவவெருமானின் திருத்தலங்களிலோ முருக பெருமான் திருக் கோயில்களிலோ படுத்துறங்கக்கூடாது. இதனால் கீழான பிறவிகள் கிடைக்கும்! பாம்புகள், வௌவால்கள், புறாக்கள் குரங்குகள் போன்ற தாழ்ந்த பிறவிக்குப் போக நேரும்!

முறிந்துபோன கட்டில்கள் மேலோ-பழுதடைந்த கட்டில்கள் மீதோ-படுக்கக்கூடாது. இதில் தீய ஆவிகள் வாசம் செய்யும் விஷப் பூச்சிகளை இந்த ஆவிகள் ஏவிவிட்டு நம்மைக் கடிக்கச் செய்யும்! முச்சந்தி-நாற்சந்திகளிலும் படுக்கக்கூடாது என்று மகாமுனிவர் சசனர்-ஹிந்து சாஸ்திரம் என்ற நூலில் தெளிவாக எடுத்துக் கூறியுள்ளார்! மேலும் சசனமகான் ஏரியருகில்-வெறும் மணலில் செங்கல் கிடக்கும் இடங்களில் கூடப்படுக்கக்கூடாது என்கிறார்! மணலில் படுப்பதால் நம்முடைய சக்தி-நமக்கென்றுள்ள கவர்ச்சி சக்தி அழிந்துபோகும்! செங்கல் கற்களில் தடங்கல் தேவதைகள் வாழ்கின்றன. இவைகளின் அருகில் படுப்பதால் சோம்பலும் சோர்வும் அதிகமாகி-வேலைகள் மிகவும் தாமதப்படும்! செங்கல்களைக் கட்டும்போது நீர் ஊற்றி நனைப்பது இதனால் தான். நீர் ஊற்றியதும் இத்துர் தேவதைகள் அடங்கிப்

போகின்றன! மேலும் செங்கல் குவியல்களுக்குள் விஷப்பாம்பும் வாசம் செய்யும். இவைகளாலும் நமக்கு ஆபத்து நேரும். ஏரியருகில் ஏராளமான தீய ஆவிகள் ஆட்டம் போடுகின்றன. இரவில் ஏரிப்பக்கம் போனால் இதை அறியலாம்! இந்தத் தீய ஆவிகள் நம்முடைய உடலிலுள்ள துவாரங்கள் வழியாக உடலுள் புகுந்து நம்மை செயல்பட விடாமல் செய்கின்றன!

சிறுவர்கள் நடுவிலும் பெரியவர்கள் படுக்கக்கூடாது! இதனால் அந்தச் சிறுவர்களிடமுள்ள தீய உணர்ச்சிகள் யாவும் நமக்கு வந்து சேர்கின்றன! நம்முடைய புலனடக்கம், மன அடக்கம் குறைந்து விடுகின்றன! நம்முடைய தீய உணர்ச்சிகள் சிறுவர்களை ஈர்த்துக் கொண்டு அவர்கள் லட்சியங்கள் பாதிக்கின்றன. பெரியவர்களுக்குரிய பெண்ணாசை-ஆணாசை சிறுவர்களை எளிதில் பற்றிக்கொள்கின்றன! நமக்கு சிறுவர்களுக்கும் பாதிப்புகள் உண்டாகின்றன! சிறுவர்கள் மத்தியில் படுக்கும்போது அவர்களின் மூச்சுக்காற்றை நம்முடைய மூச்சுக்காற்று பாதிக்கச் செய்கின்றன! இதனால் பெரியவர்களிடமுள்ள வியாதிகள் சிறுவர்களுக்குப் போகின்றன! இதனால் சிறுவர்களின் ஆயுள்பலம் பாதிக்கிறது! குழந்தைகளை அருகில் படுக்கவைத்துக் கொண்டு கட்டிப்பிடித்துப் பெரியவர்கள் படுத்துக்கொள்ளும் குடும்பம் தரித்திர கூடாரமாய் விளங்கும்! சண்டை சச்சரவுகள் நிறைந்து காணப்படும்! வேடிக்கை விநோதங்களும் கூத்தும் கும்மாளமும், தீங்கும் பாவமும் குடும்பத்தில் நடந்தபடி இருக்கும். தனிப்படுக்கை தான் சிறந்தது! இதனால் தைரியமும் துணிவும் வளரும்! தன்னம்பிக்கைக் கூடும்! எதையும் சமாளிக்கக்கூடிய மன ஆற்றலும் வளரும்! அதனால் குடும்பத்தில் குழந்தைகள் தனியாகவும் பெரியவர்கள் தனியாகவும் படுத்துறங்க வேண்டும்!

ஈரத்துணியிலோ-உடைகளிலோ கூட படுத்துறங்கக் கூடாது! பச்சிலைகளில் சிவசக்தி உள்ளது இந்தச் சக்தியை அசுத்தப்படுத்திய குற்றம் நமக்குச் சேராதிருக்க இதன்

மேல்படுக்கக்கூடாது. நோயாளின் சில மருந்து இலைகளைப் பரப்பிப்படுக்கலாம்! சாதாரணமான நேரங்களில்-நோயில்லாத வேளைகளில் பச்சிலைகளில் படுக்கக்கூடாது! எல்லா பச்சிலைகளும் சிவ மூலிகைகள் ஆகும்! இதை மாசுபடுத்தினால் சுகத்திற்குப் பதில் துக்கமும்-சந்தோஷத்திற்குப்பதில் துன்பமும் தொடரும்!! ஈரமான துணிகளை அணிவதனால் தோல்களில் சரும வியாதிகள் உண்டாகும். ஆண்கள் ஈரத்துணி அணிந்து காயும்வரை காத்திருந்தால் மலட்டுத்தன்மை உண்டாகும். இருவருமே ஈரத்தை அடிக்கடி அணிவதால் இல்லறத்தில் பிரச்சனையும்-கணவன் மனைவி பிரிவினையும் உண்டாகும்!

நிர்வாணமாகப் படுக்கக்கூடாது! உலகத்திலுள்ள பேய்களெல்லாம் பிசாசுகளெல்லாம் நிர்வாணமாக படுத்தால் உங்களோடு உறவு கொள்ள வரும். மலத்தில் உண்டாகும் புழுப் போல காமக்கேளிக்கைகளில் ஈடுபடத்தூண்டும்; இதனால் ஆயுள் குறைந்து-வறுமை நிறைந்து சண்டை சச்சரவுக்குள் நிம்மதியாக வாழ முடியாமல் துன்பப்படுவீர்கள்! நிர்வாணமாகப்படுத்து இன்பம் நுகரும் ஆணும் பெண்ணும் அடுத்த பிறவியில் ஒருவருக் கொருவர் கிடைக்காமல் ஏங்கும் பிறவியில் உழல வேண்டியதிருக்கும்! கணவன் மனைவியானால்கூட இம்மாதிரி படுத்துறங்க-பிரிவு நிச்சியம். தூய்மை-ஆசாரம்-ஒழுங்கு-கட்டுப்பாடு காமக் களியாட்டத்துக்கு மிகத் தேவையாகும்! இதை மீறும் பெண்ணுமானும் மிருகமாகப் பிறவி எடுக்க ரெடியாக இருக்க வேண்டியதுதான்!

## காந்தம் அணிக

குடும்பத்திலுள்ளவர்கள் தங்கள் படுக்கையின் தலையணையில் காந்தத்தை வைத்துப்படுக்கலாம். இதனால் வெறித்தனம் குறைந்து மிதமான சுகம் அனுபவிக்கலாம்! மிதமான சுகம் நீண்ட ஆயுளையும் பலத்தையும், ஞானத்தையும் வாரிக் கொடுக்கும்! காந்தம் சாந்தத்தையும் அமைதியையும் தரும்! நிதான புத்தியை வளர்க்கும்!

நினைத்ததை நடத்திக் கொடுக்கும். உடலின் எந்தப்பாகத்தில் பிரச்சனை உள்ளதோ அந்த இடத்தில் காந்தத்தை வைத்து அழுத்தியபடி "ஓம் ஸ்ரீ வைத்தியநாதாய நமசிவாய" என்று சொல்லியபடி சிறிதுநேரம் அமர்ந்திருக்க வேண்டும். சிறிது நேரத்தில் உபாதை குறைந்து சுகம் கிடைக்கும்!

அதிகமாக உணர்ச்சி வசப்படுகின்றவர்கள் அவசியம் காந்தத்தை உடலில் அடிக்கடிப்படச் செய்ய வேண்டும்! இதனால் நரம்புகளிலுள்ள பலவீனம் நீங்கி நரம்புப்பலப்படும். குறிப்பாக மூளை நரம்புகள் பலப்படும்! இதனால் அறிவாளியாவீர்கள்! காந்த சக்தி பூமியில் அதிகமாக இருப்பதால் தான் பூமியிலுள்ள உயிர்கள் அனைத்தும் ஒவ்வொரு விதத்தில் திறமை சாலிகளாக இருந்து வருகின்றன! காந்தத் துண்டுகளையோ-கம்பிகளையோ உடலில் அணிந்திருந்தால் நரம்புகள் அனைத்தும் பலப்படும்! கோழைத்தனம் நீங்கும்! குறிக்கோளில் வெற்றி கிடைக்கும்! புகழான வாழ்க்கை தொடரும்!

பெண்கள் தங்களின் நகைகளில் காந்தக்கம்பிகளை அல்லது துண்டுகளைச் சேர்த்து அணிந்து வரவேண்டும். எப்போதும் கழற்றக்கூடாது! தூங்கும்போதுகூட உடலில் இது இருக்கலாம்! குழந்தைபேறு நீண்டநாள் இல்லாதவர்களுக்கு காந்தம் உடலுடன் இருப்பது மிகவும் நல்லது! மலட்டுத் தன்மை நீங்கி தாய்ப்பெருமை கிடைக்கும்! கணவன் மனைவிக்குள் நல்ல உறவும் ஏற்படும்!

பிரபஞ்ச உறபத்தி என்ற நூல் இந்த உண்மைகளைக் கூறுகிறது! கவரிங் நகைகளைப் பெண்கள் அணியக்கூடாது. பெரிய பணக்காரிகள் கூட ஆசைகக்காக கவரிங் நகைகளை அணிகிறார்கள். இது நல்லதல்ல! இதனால் பண்க்காரியும் ஏழையாகும் வாய்ப்புண்டாகும்! தரித்திரம் பெருகும்! இதுபோல் பிளாஸ்திக் மணிகளையும் அணியக்கூடாது. பவளம், தங்கம், சிறுமணி போன்ற சாஸ்திரம் குறைசொல்லாத மணிகளைத் தான் பெண்கள் அணியவேண்டும் கல்யாணம் ஆகாத பெண்கள் கருமணிகளை அணியலாம்! கறுப்பு உடைகளை அணியக்கூடாது! தலையில் வாசமில்லாத பூக்களை அணியக்கூடாது!

பூக்களை அணிவதற்கு-அதாவது தலையில் சூடுவதற்கு முன் முகர்ந்து பார்க்கக்கூடாது! முகர்ந்து பார்ப்பதால் அதிலுள்ள ஆசீர்வதிக்கும் தேவதைகள் அகன்றுவிடும்! இரவு படுக்கப் போகும் போது தலையில் அணிந்துள்ள பூக்களை எடுத்துப் போட்டு விட வேண்டும். இல்லையென்றால்-இந்தப் பூக்களில் துர்தேவதைகள் வந்தமர்ந்து கொண்டு தூங்கவிடாமல் செய்வார்கள்! தூக்கம் வராததால் கணவனை-குழந்தைகளை தழுவிப்பிடிக்க தூண்டும்! இதன் காரணமாக குடும்பத்தில் சண்டை ச்சரவுகள் அதிகமாகும்! பிரிவினைகளும் நடக்கும்!

செண்ட்-கஸ்தூரி-சந்தனம்-அத்தர்-புனுகு போன்ற எந்த வாசப்பொருளையும் பெண்கள் இரவில் முகர்ந்து பார்க்கக்கூடாது! இப்படிப்பட்ட வாசனையை நள்ளிரவில் முகர்ந்து பார்த்தால் சுற்றிலும் தீய தேவதைகள் வந்து அமர்ந்துகொள்ளும்! காலையில் எதிர்பாராத நோயும் பயமும் தோன்றும். வைத்தியரால் கண்டு பிடிக்க முடியாத நோய்கள் உருவாகவும் வாய்ப்பிருக்கிறது! இந்தக் கருத்துக்களை ஆதரித்து தேரையார் என்ற சித்தர்கூட எழுதியுள்ளார் தம் பாடல்களில் பாடியுள்ளார்!

வாசனைமிக்க சமையல்கள் கூட வரவேற்க தக்கதல்ல! இது தொடர்கிறபோது ஆயுள் குறைகிறது! மிதமான உணவே ஏற்றது! கடினமான உணவை ஒரு பொழுதும் ஏற்கக்கூடாது! மிருக-பறவை உணவுகளை உண்ணக்கூடாது! மாமிச உணவு மனிதனை மிருகமாக மாற்றுகிறது! நலமளிக்கும் நல்ல உணவு காய்கறி உணவுதான்! இதை உண்டவர்கள்தான் ஞானிகளாக விளங்கி நீண்டகாலம் வாழ்ந்து உலகச் சேவை செய்திருக்கிறார்கள்! புலால் உணவு உண்ட எவரும் ஞானிகளானதாக வரலாறுகள் இல்லை. புலால் உணவை பிரசாதமாக உணடால்கூட பாவமாகும்! இதற்காக மண்ணில் பிறந்து கஷ்டம் அனுபவிக்க வேண்டும்! அதிகமான மசாலா வாசனைகளினால் மோகமும் போகமும் அதிகமாகி - அற்ப சுகங்களில் மனிதன் கிடந்து உழன்று அவஸ்தைப்பட வேண்டியதிருக்கும். கரம் மசாலாக்களும், கார

மசலாக்களும் மனித உணர்ச்சிகளை மாசுபடுத்தி-மனிதனை மிருகமாக்குகின்றன!

பொதுவாக-மனித வாழ்க்கையோடு வாசனைகள் வாராதிருப்பது நல்லது பவுடர்களும், சென்ட்டுக்களும் ஸ்னோக்களும், வாசனை சோப்புக்களும் மனித ஆயுளைக் குறைத்து வருகின்றன. கெமிக்கல் உரங்களால் உணவுகளைப் படைப்பதுபோல் மனிதன் கெமிக்கல் வாசனைப் பொருட்களால் மனிதனின் இயற்கை அழகைப்பாழ்படுத்தி வருகிறான்! சில கெமிக்கல் பவுடர்கள் முகத்திற்கு இயற்கையிலேயே கிடைத்துள்ள தேஜஸ் என்ற கவர்ச்சியைக் சிதைத்து விடுகின்றன! சோப்புக்களும், ஷாம்புகளும் இன்றைக்கு மனித இயற்கையை மாற்றி விகாரமாக்கி வருகின்றன. அழுக்குப் போக்க இரண்டு வேளை குளிக்க வேண்டும். குளிக்கும் போது கண்ட சோப்புக்களையெல்லாம் போட்டு உண்மையழகைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது!

உணவுகளிலும் மிளகாய்பட்டை லவங்கங்கள் போன்ற திகட்டும் வாசனைப் பொருட்களை அதிகம் போடாது குறைக்க வேண்டும்! நீண்ட நாள் வாழவும், நிம்மதியாகவும், குடும்பம் குதூகலமாய் வாழவும், இது அவசியம்! சில குடும்பத்தில் வாசனையாலேயே பிரச்சனைகள் உண்டாகின்றன. பூவாசனை-குழம்பு வாசனைகளுக்குச் சில கெட்ட ஆவிகள் வரும். இதனால் காமக்களியாட்டங்களும், கோப தாபங்களால் சண்டைகளும், போட்டிப் பொறாமைகளும் வாதங்களும் நடக்கும்! வீட்டில் எப்போதும் சண்டைகள் மூழ்வதற்கு தம்பதிகள் அளவில்லாத வாசனைகளைப் பயன்படுத்துவதுதான் காரணம். பூவாசம் அல்லது உணவு வாசம் அல்லது ஷாம்பு சோப்பு வாசம் ஏதாவதொரு வாசம் வீட்டில் வாசம் செய்தபடி இருப்பதால்-துஷ்ட ஆவிகள் வீட்டுக்குள் புகுந்து விடுவதால்-குடும்பம் ரணகள மைதானமாகி விடுகிறது! தம்பதிகள் அடிக்கடிச் சண்டை சச்சரவுகள் போட்டுக் கொள்வதற்கும் அதிகமான சந்தோஷங்களில் ஈடுபடுவதற்கும் இதுபோன்றவைகளே காரணங்களாகும். எப்போதும் உணர்ச்சி வழியில்

நினைவுகளை செலுத்துவதற்கும்-எப்போதும் தீய உணர்ச்சிகளைப் பற்றிய ஆண்பெண் இருப்பதற்கும் கர்வ அகங்கார எண்ணங்களைத் தூண்டி விடும் வாசனை உணவுகளே காரணமாகும்'

## தலையில் இரும்பு

குடும்பப் பெண்கள் தலைகளில் கொண்டை-சடைகள் போடும்போது முடியைப் பத்திரமாய்ப் பாதுகாக்க ஹேர்பின் என்ற இரும்பு ஊசியைப் பயன்படுத்துகிறார்கள். கொண்டை ஊசியென்ற பெயரில் இரும்புகளையும் பயன்படுத்து கின்றார்கள்! இதுபோல் இரும்பு ஊசிகளைப் பயன்படுத்தக்கூடாது! அதற்குப் பதில் வண்ணவண்ண மர ஊசிகளையோ பிளாஸ்திக் ஊசிகளையோ பயன்படுத்தலாம்- என்று வால்முகி முனிவர் கூறுகிறார்.

இரும்பு உடலில் இருப்பதால் எதிர்பாராத மயக்கம் உண்டாகும்! இரத்தக் கொதிப்பு என்ற கொடிய நோய் உண்டாகும்! தவிரவும் இரும்பின் துருப்பிடிக்கும் தன்மை தலைமுடியின் நிறத்தை கறுமையிலிருந்து மாற்றிவிடும்! கறுத்த தலைமுடி வராமல் இரும்பு ஊசிகள் தடுக்கக்கூடியவைகள்! இரும்பு ஊசிகளைப் பயன்படுத்துவதால் தலையில் பொடுகு, பிளவைக் கட்டி போன்றவை உண்டாகின்றன. இரும்பு அழுக்கை இழுக்கும் தன்மை கொண்டதால் அதை தலையில் வைத்துக் கொள்வதால் அதிகமாக அழுக்குச் சேர்கிறது.

முடியின் மென்மை வரவரமாறி முரட்டு முடியாகி கரடி முடிபோல் கரடு முரடாகும்! பேன்-ஈறு போன்ற தலைப் பூச்சிகளும் உண்டாகும். குறிப்பாக தலைமுடியில் இரும்புக் கம்பிக் கிளிப்புகளை அணிந்து கொள்வதால் தீய காம உணர்வுகள் அதிகமாகும். குளியல் போக்கு அதிகமாகும்! நாள் தவறி மாதவிடாய் உண்டாகும்! நிதான புத்திக்குறையும்; வேகம் அதிகமாகும்!

தற்காலத்தில் ஆடைகளில்கூட கம்பிகளைப் பின்னிப் பிணைக்கிறார்கள்! அலுமினியம் இரும்பை போன்றது தான். இரும்பின் இயல்புகள் இதற்கும் உண்டு. அலுமினிய கம்பிகளை-வாசர்களை ஆடைகளில் கவரிங் போட்டுத் தைத்து விடுகிறார்கள்! தகரம் அலுமினியம் எல்லாமே ஒரே மாதிரியான குணமுடையது தான்! அலுமினிய வளையல்கள்-அலுமினிய கழுத்தணிகள்-காதணிகள், போன்று ஏகப்பட்ட அணிகலன்கள் வந்துவிட்டன! சூட்டையும் சோம்பலையும், தரித்திரத்தையும் தருகின்றன இரும்பு தகரம், அலுமினியங்களை அணிமணிகளில் கலந்துகூட அணியக்கூடாது! இரும்பு எத்தனை தான் உயர்ந்த உலோகமாக இருப்பினும்-உபயோகப்படும் உலோகமானாலும் அது தரித்திரத்தின் அடையாளமாகும்!

இரும்புத் தட்டில் சாப்பிட்டுப் பாருங்கள் (உருவாக்கி!) மறுநாள் உணவு கிடைக்காது போகும்! இன்று இரும்புத் தட்டில் உருவான தோசையை உண்டு பாருங்கள்; இன்றெல்லாம் நிம்மதியாக இருக்காது. ஏதாவது பிரச்சனையில் சிக்கித் தவிக்க வேண்டியதிருக்கும்! வேறு பலகாரங்களிலும் நாட்டம் இல்லாமல் இருக்கும்! தோசை டிபன் சாப்பிட்ட இன்று ஒரே சோம்பலாக அஜீரணமாக-தூக்கக் களைப்பாக இருக்கும். தொடர்ந்து எந்த வேலையும் செய்ய முடியாத நிலைமையும் உருவாகிவிடும்!

இரும்பு கத்தி-சுத்தி-கம்பி (கடப்பாறை) மண்வெட்டி, வாள், போன்ற பொருட்களைப் பாருங்கள்! அடிக்கடி உபயோகிக்க முடியாது மூலையில் கிடக்கும். மாதத்தில் பத்து நாளாவது இந்த ஆயுதங்கள் சோம்பலிலே கிடக்கும்! மொத்தத்தில் இரும்பின் தன்மை இருளின் தன்மை! சோம்பலின் உண்மை! சோர்வின் வெளிப்பாடு என்பதில் ஐயமில்லை. இதை அணிமணிகளுக்கோ ஆடைகளுக்கோ (கவசம்) பயன்படுத்தக்கூடாது.

இரும்பு மிஷின்களை நிறையப்போட்டு கம்பெனிகள் நடத்துகின்றவர்களைப் பாருங்கள்; யாராவது நிம்மதியாக சந்தோஷமாக இருக்கிறார்களா? என்று! கடனிலும்,

தொழிலாளர் பிரச்சனைகளிலும் பதுங்கி வாழ்வதைப் பார்க்க முடியும்! அதிகமாக குழம்பி-நிம்மதி குறைந்து வாழ்பவர்கள் கார் வாகனங்களைப் வைத்திருப்பவர்களும் கம்பெனி நடத்துபவர்களும் தான்! பரம ஏழை அனுபவிக்கின்ற சந்தோஷத்தைக் கூட இவர்களால் அடைய முடியாது! நோயில் சிக்கிக் கொண்டு கடன்காரர்களிடம் சிக்கிக் கொண்டு தொழிலாளியிடம் சிக்கிக் கொண்டு இரும்போடு வாழ்பவர்கள் இடரோடு வாழ்கிறார்கள்! இரும்புடன் இணைந்துள்ளவர்களுக்கு சரியான நேரத்துக்குக் தூக்கம் கிடையாது! ஷிப்ட் முறையில் வேலை-ஷிப்ட் முறையில் சந்தோஷம், ஷிப்ட் முறையில் விருந்து-ஷிப்ட் முறையில் இவர்களின் வாழ்க்கைக் சக்கரம் உருண்டோடுகிறது!

இரும்பு மனிதனோடு இரண்டறக் கலந்துள்ளது! நல்லவேளை இரும்புடன் சில்வர் கலந்து-எவர்சில்வர் வந்தது! இல்லையென்றால் மனிதன் இரும்பிடம் சிக்கிக் கொண்டு இன்னேரம் அழிந்து ஒழிந்திருப்பான்! இரும்பு சைத்தான் சாம்ராட்யத்தின் மணிமகுடம்! இது இருக்கும் இடத்தில் இருளும் ஒளியும் தினசரி சண்டை இட்டுக் கொண்டிருக்கும்! இரும்பைத் தொடும்போது-இரும்போடு வாழ் வேண்டிய இயங்க வேண்டிய நிலைவரும் போது-அந்த இரும்புப் பொருளுக்கு குங்குமம் இட்டு-கும்பிட்டு “ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி

ஆதி மஹா சக்தி பராசக்தி ஓம்”

என்று ஜெபித்த பின்பு எதையும் செய்யத் தொடங்குங்கள்! தோசை-குழிப்பணியாரம் சுட்டாலும் பரவாயில்லை; குங்குமம் இட்டு-ஓம் சக்தி மந்திரம் சொல்லி ஜெபித்த பின்பு வேலை தொடங்குங்கள். அப்படியானால் பிரச்சனைகள் விஷ்வரூபம் எடுக்காது!

## தாய்ப்பால் தாராத பாவம்

கலிகாலக் கொடுமைகளில் தாய்ப்பால் குழந்தை களுக்குத் தாராதது பெரிய கொடுமையாகும். பெற்ற

குழந்தைக்குத் தாய்ப்பால் தாராமல் "டப்பா" பால் கொடுப்பதென்பது பாசமில்லாத உறவு வளர்க்கும் ஒரு இழி செயலாகும்! பலர் தங்கள் அழகு கெட்டுவிடும் என்பதால்- இந்தக் கொடிய காரியத்தைத் தொடர்ந்து செய்து வருகிறார்கள். இதனால் தாய்க்கும் சேய்க்கும் உண்மை அன்பு வளர்வதில்லை! குழந்தை வளரவளர தாயின் கட்டுப்பாட்டை மீறிப்போகத் தொடங்குகிறது! -இறுதியில் தாயை தன் வாழ்க்கைக்குத் தடைக்கல்லாகக் கருதி எதிர்க்கிறது! ஒதுக்குகிறது!

முடிந்தவரைக்கும், தனக்கு சக்தி இருக்கிற வரைக்கும் எல்லாத்தாயும் தாய்ப்பால் கொடுத்துக் குழந்தையை வளர்க்க வேண்டும்! புட்டிப்பால்-மாவுப்பால் பவுடர் கொடுத்து ஏனோ-தானோ என்று தம் குழந்தைகளை வளர்ப்பது பாவம்! தாய் அன்பின் மறுவடிவம். பாசத்தின் இருப்பிடம், உறவின் ஆதாரம்! தாய்க் குழந்தைகளை சீராக வளர்க்க வேண்டும்! செல்லம் ஊட்டி, சிறப்பூட்டி, அன்புகாட்டி, அறிவூட்டி வளர்க்க வேண்டும். இப்படி வளர்ப்பதற்கு தாய் தரும் முதல் அன்பு தாய்ப்பால் என்ற அமுதம் மூலம் தான் கிடைக்கிறது.

தாய்ப்பால் மூலம் அன்பும் பாசமும் உறவும் குழந்தைக்குச் செலுத்தப்படுகிறது! இது இல்லாத போது தாய்க்கும் குழந்தைக்கும் நல்லுறவு வளர அவ்வளவாக வாய்பில்லாமல் போகிறது! தாய்ப் பால் தாராத தாய்க்கும் பிள்ளைகளுக்கும் பிற்காலத்தில் உறவுகள் சரிப்படுவதில்லை! எதிரும்புதிரும் ஆகிவிடுகிறார்கள். தாயின் கடமைகளின் மேன்மையைக் கருதித்தான் இறைவன் அமுதத்தை தாயுடம்பில் வைத்தருள் புரிந்துள்ளார்! தாய் கடவுளின் அம்சமானவள்! இவள் குழந்தைகளுக்குக் குறைவைப்பது தர்மமல்ல!

தாய்குழந்தை பெற்ற பச்சை உடலுக்கு மிகச் சத்தான உணவுகளை உண்ண வேண்டும். சாத்துக்குடி, கமலா ஆப்பிள் போன்ற சத்துள்ள பழங்களையும், பால், கட்டித்தயிர் போன்ற பாணங்களையும் தாய்ச் சாப்பிட வேண்டும்! இதனால் தாய்ப்பால் சுரக்கும்! முந்திரி பாதாம், திராட்சை

போன்றவற்றையும், கோதுமை கம்பு, கேழ்வரகு உணவு வகைகளையும் பருப்பு வகைகள், பயறு வகைகளையும் அடிக்கடி உட்கொள்ளவேண்டும்!

அழகு குறைந்துவிடும் எனத் தாய்ப்பாலை குழந்தைகளுக்குக் கொடுக்காமல் பாலை நிறுத்துவது கொடிய மிகக் கொடிய பாவமாகும்! இந்தப் பாவத்துக்கு என்ன தண்டனை தெரியுமா? அனாதையாய் பிறந்து தெருவில் கிடந்து சோற்றுக்கும் சுகத்துக்கும் திண்டாட வேண்டுமென்று கிரகஷ்த தர்மம் என்ற தர்மநூல் கூறுகிறது! அதாவது குழந்தைகளுக்குத் தாய்ப்பால் கொடுத்தால் தன் அழகு குறைந்துவிடும் என்று நினைக்கின்ற தாய்கள் அனாதைப் பிணமாய் தெருவில் செத்துக்கிடப்பார்கள்-என்பது அந்த தர்ம நூலின் கருத்து.

அனாதையாய் பிறந்து அனாதையாய்த் திரிந்து அனாதைப் பிணமாய் போகாதிருக்க-எந்தத்தாயும் தாய்ப்பால் நிறுத்தக்கூடாது! இதுமட்டுமல்ல-தாய்ப்பால் குழந்தைக்குத் தராது சிற்றின்பக் கேளிக்கைகளில் ஈடுபடுகின்ற பெண்கள் இருக்கும் வீடு பேய்கள் வாழும்காடாக மாறிவிடும். சண்டைச் சச்சரவுகளும், கூச்சல் குழப்பங்களும் நீடிக்கும் மன அடக்கமில்லாத கணவனும் மனைவியும் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டுக் கூச்சல் போட்டு அழுது கொண்டிருப்பார்கள்! அந்த வீட்டில் செல்வமாதா லட்சுமிதேவி வெளியேறிப் போவாள்! தரித்திரத்தாயும் மூதேவியும் அங்கு வாசம் செய்ய வருவார்கள்! இருண்ட சுடுகாடாய் வீட்டை மாற்றாமல் இருக்க-எல்லாத்தாயும் இறைவன் கொடுத்த அமுதத்தை தம் குழந்தைகளுக்குக் கொடுத்து ஆளாக்கி மேலாம் இல்லறத்தில் அணையா விளக்கெரிய உதவவேண்டும்!

தாய்ப்பால் அமுதம்! இதை உண்ணாமல் எந்தக் குழந்தையும் பூமியில் அறிவாளியாக விளங்க முடியாது. தாய்பாலை மிருகங்களெல்லாம் குட்டிகளுக்கு அன்புடன் அளித்து வளர்க்கின்றன. மனித மங்கையர் மட்டும் தன் அழகு குறைந்து விடும் என்று நினைப்பது பாவமல்லவா?

ஓடடக்கறந்து பாலை மிருகங்களிடமிருந்து பிடுங்கும் மனிதனும் அனாதைப் பிணமாகத்தான் கிடந்து சாவான்! பசுவுக்கு அதன் கன்றுக்காக தான் இறைவன் பால் கொடுத்துள்ளார் கன்று குடித்த மீதிப் பாலை தான் மனிதன் கறந்து கொள்ளலாம். இவன் கறந்து விட்டு மீதியை கன்றுக்கு கொடுப்பது கொலை செய்வதற்கு இணையான குற்றமாகும்! இந்தக் குற்றத்துக்கு-மனித பிறவியிலிருந்து மாட்டுப் பிறப்புக்கு போகவேண்டும் என்பதுதான் நீதியாகும்! மாடுகளிலும் ஓரிரு முறைபால் கொடுத்துவிட்டு மலட்டுத் மாடாய்மாறும் பிறவி தான் கிடைக்கும்!

## கற்பு என்றால்

கற்பில் சிறந்த கண்ணகி இன்று பத்தினிப் பெண்ணாக வணங்கப்படுகிறாள்! பெண் தெய்வமான அந்த பத்தினித் தெய்வம் கணவன் தன்னை விட்டுப் பிரிந்தாலும் கணவனே கண்கண்ட தெய்வம்-என்று கணவனையே கருதி வாழ்ந்தாள்! கண்ணகி பத்தினியைப் போல் அன்று ஏகப்பட்ட பதி விரதைகள்-கற்புக் கரசிகள் வாழ்ந்திருக்கிறார்கள். கணவனைக் கண்கண்ட தெய்வமாக பூஜித்திருக்கிறார்கள்! கணவன் மனைவிக்குள் சிறு வாக்குவாதம் கூட வந்ததில்லை! தகராறுக்கே இடமில்லாமல் அன்றைய தம்பதிகள் வாழ்ந்திருக்கிறார்கள்!

கருத்து வேறுபாடுகளைப் பேசித் தீர்த்து-கணவன் சொல்லுக்கு மனைவி கட்டுப்பட்டு அன்றைய குடும்பம் நடந்திருக்கிறது. கணவன் விருப்பம் போல் அன்றைய மனைவி நடந்து கொண்டாள். கணவன் பேச்சுக்கு மறு பேச்சு பேசாமல் வாழ்ந்து வந்தாள்! இல்லறத்தை நல்லறத்தின் இருப்பிடமாக அன்றைய கணவன் மனைவிகள் மாற்றிக் கொண்டார்கள்! குடும்பம் கூட அன்று கோயிலாக இருந்தது! அன்று வாழ்ந்த இல்லறப் பெண்கள் கற்புக்கரசி என்று அழைக்கப்பட்டார்கள். தம் கணவன் முகத்தைத்தவிர வேறு அந்நிய ஆடவனை அன்றைய பெண் ஓரக்கண்ணால்கூட பார்த்ததில்லை.

கற்பு என்றும் கல் போன்ற உறுதியான நற்பண்பை-மன அடக்கம் நிறைந்த மாபெரும் தவ இயல்பை அன்றைய பெண்கள் வளர்த்துக் கொண்டிருந்தார்கள்! புல்லானாலும் புருஷன்-கல்லானாலும் கணவன்-என்று வாழ்ந்த அன்றையப் பெண்களின் வாழ்க்கையில் புயல் பூகம்பங்கள் வீசவில்லை! சிறு காற்றுக் கறுப்புகள் கூட புகுந்ததில்லை! இல்லறம்-நல்லறம் என்று போற்றும்படியாக இருந்தது.

இன்றைய குடும்பத்தைப் பாருங்கள்! சண்டையும் சச்சரவும், பிரச்சனைகளும்! சில குடும்பங்கள் இன்றைக்கு யுத்த களமாகவே காட்சியளிக்கிறது! கணவனை ஒரு கொலு பொம்மையாகவே வைத்துள்ளார்கள். வேறுசில குடும்பங்களில் மனைவியை ஒரு அடிமை விலங்காகவே வைத்துக் கொடுமைப்படுத்தி வருகிறார்கள்!

எந்த வீட்டில் பெண்களின் குரல் ஓங்கி ஒலிக்கிறதோ அந்த வீட்டில் சைத்தான்களின் ஆட்சிதான் நடக்கும் என்பதில் சந்தேகமில்லை. யாரும் யாருக்கும் அடிமையில்லை; கணவனும் மனைவியும் சரிசமமானவர்கள்-என்கிறன்ற உண்மையை ஒவ்வொரு குடும்பஸ்தனும் குடும்பஸ்தியும் மறக்கக்கூடாது!

கணவன் ஆண்மை இல்லாதவனாயினும் அவனையே பெண் விரும்பி நேசித்துப் போற்றிக் காக்க வேண்டும். வேறொரு ஆடவனை நோக்கக்கூடாது. இதுதான் கற்பு நெறி என்பதாகும்! இருக்கும் வரைபிடிங்கி விட்டு-பொய்யன்பு காட்டி அவன் சத்தெல்லாம் உறிஞ்சிவிட்டு-அவன் சம்பாதித்ததெல்லாம் தன் பெயருக்கு எழுதிக்கொண்டு-கணவன் வயதான காலத்தில் அவனை வருத்தப்பட வைப்பது-அவனை வீட்டைவிட்டுத் துரத்துவது கொடிய பாவமாகும்! இந்தப் பெண்கள் கற்பு நெறிக்குக் களங்கம் விளைவிப்பவர்களாகும்!

கணவன் உண்டால் உண்பார்கள்; கணவன் இல்லாதபோது உண்ணாமலே காத்திருப்பார்கள். கணவனுக்குச் சொந்தமான இந்த உடலை அந்நிய

ஆடவர்கள் பார்க்கக்கூட அனுமதிக்க மாட்டார்கள்! கற்புள்ள பெண்கள் அன்றைக்கு இவ்விதம் வாழ்ந்தார்கள். இன்றையக் குடும்பக் கஷ்டங்களுக்கு ஆணும் பெண்ணும் காமவெறி பிடித்து அலைவதுதான் முக்ய காரணமாகும். ஆனோ பெண்ணோ அதை அடக்க முடியாமல் தவறு செய்யத்துணியும் போது வீடு சுடுகாடாக மாறிவிடும்.

ஆசைகளை அடக்க அடக்க குடும்பம் குதூகலமடையும். ஆண்பெண் உறவில் சந்தோஷம் மிளிரும் அடிக்கடி கூடாமல்-எப்போதாவது கூடி ஆண்பெண் உறவு மலர எப்போதும் வாழ முடியும்! ஆண்கள் எந்த காரணத்தைக் கொண்டும் மனைவிக்குத் துரோகம் செய்யக்கூடாது! அப்படி இருந்தால் மனைவி கற்புக் கரசியாக விளங்குவாள்! துரோகம் செய்யும் ஆணின் மனைவியும் துரோகம் செய்பவளாக மாறுவாள்.

அடுத்தவன் மனைவியை இச்சையுடன் பார்த்தாலே- மனதுக்குள் விபச்சாரம் பண்ணியவனாவாய்-என்கிறார் யேசுநாதர்! குருவிக்காரப் பெண்கள் பலமான கட்டுப்பாட்டை வைத்துக் கொண்டுள்ளார்கள். இந்தப் பெண்கள் எந்த அந்நிய ஆடவனுக்கும் மனதில் இடம் கொடுப்பதில்லை! அதுமாதிரி மலை ஜாதி பெண்களும் கற்புக்கரசிகளாக இன்றும் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களைத் தாழ்ந்தவர்களாகக் கருதும் சில உயர்ந்த ஜாதிப் பெண்கள் தான் ஒழுக்கம் கெட்ட கேவலமான வாழ்க்கை வாழ்கிறார்கள்! கணவனுக்குத் துணிந்து துரோகம் செய்கிறார்கள்! அடுத்த ஜென்மத்தில்-கணவனுக்குத் துரோகம் செய்யும் இந்தப் பெண்கள் உறவில்லாத அனாதைகளாய்க் கிடந்து தவிக்கப்போகிறார்கள். புருஷனுக்கு ஏங்கும் பெண்களாகப் பிறந்தும் மனைவிக்கு ஏங்கும் புருஷர்களாகப் பிறந்தும் கஷ்டப்பட போகிறார்கள்!

ஒருவனைத் தவிர-ஒருத்தியைத் தவிர கற்பை இழக்கும் கழிசடைகள் இதுபோல் பிறப்பார்கள் என்பதில் ஐயமில்லை! ஒழுக்கம் கெட்டவர்கள் அழகான வெள்ளையாடை உடுத்திக் கொண்டு அதிலே சேற்றைவாரிப்போட்டுக் கொள்ளும் குணசாலிகளாகும்!

சமுதாயத்தில் இதுபோன்ற ஒழுக்கக்கேடுகள் உருவாகாமல் தடுக்க வேண்டும்! இதற்கு சிறுவயதிலேயே நல்ல கல்வி அளிக்க வேண்டும்.

காமவெறி பிடித்த ஆண்கள் இருக்கும் வீடுகள் கடைந்தெடுத்த பேய்கள் வாழும் இல்லங்களாகும்! இந்த இல்லங்களில் மருந்துக்கூடச் சந்தோஷங்களைப் பார்க்க முடியாது! சில குடும்பங்கள் ரகசியமாக காம உணர்வுகளை வைத்துக் கொண்டே ஆணும் பெண்ணும் அடிக்கடிச் சண்டை இட்டுக் கொள்வார்கள்! இவர்கள் சீக்கிரமாக-நிரந்தரமாகப் பிரிந்து விடுவதுதான் இவர்களுக்கும் இவர்கள் குடும்பத்தினர்க்கும் நன்மை பயக்கும்!

## ஆணும் பெண்ணும்

சிவசக்தி ரூபமான ஆணும் பெண்ணும் ஒற்றுமையாக குடும்பத்தில் வாழவேண்டும்! ஒரு பெண் கற்புள்ளவளாக இருக்க வேண்டும் இருந்தால் தம் குலத்துக்குக்கெல்லாம் மேன்மை படுத்துபவளாகிறாள்! கற்புள்ளவள் இருக்கும் வீடு சொர்க்கமாகும் கற்புள்ளவளுடன், மகாலட்சுமியும், ரதிதேவியும் உடன் இருப்பார்கள்-என்பது மகாமுனிவர் நாரதரின் கருத்து! பெண்கள் தங்கள் குடும்ப நலனுக்காக கற்புக்கரசிகளாக வாழவேண்டும். வெறி பிடித்த ஆண்களை அடக்கி அன்புகாட்ட வேண்டும். ஒருமுறை சக்தி இழப்பதால் பல ஆயிரம் துளி ரத்தங்கள் வீணாவதை ஆண்களுக்குப் பெண்கள் எடுத்துக்கூறி அவர்களுக்கு அடக்கம் போதிக்க வேண்டும்.

வெறியைத் தூண்டாத மிதமான உணவுகளை சமைத்துப் போட்டு ஆண்களை அன்பாய் உபசரிக்க வேண்டும்! தினசரி ஆண்கள் சக்தி இழக்க காரணமான பெண்கள் ஆண்களைக் கொலை செய்ய வந்த துப்பாக்கிக் குண்டுகள் என்பதில் ஐயம் வேண்டாம்! வாரம் அல்லது மாதம் இருமுறை அது செய்து திருப்தியடைய வேண்டும்! அன்றாடம் நாய்கூடச் சேர்வதில்லை; சில ஆண் பெண்கள்

சேர்கிறார்களே? வெறிப்பிடித்த பெண்கள் சொறிப்பிடித்த நாய்களிலும் கீழானவர்கள்! காமம் அடக்கி ஆள்பவர்களே கற்புள்ளவர்கள்! இந்த வேலையை ஆண்களைக் காட்டிலும் பெண்கள் தான் தொடங்கி வைக்க வேண்டும். பெண்கள் கற்புக்கரசிகளாக இருக்க வேண்டும். தம் துணைவனையோ-அந்நிய ஆடவனையோ கவர்ந்திழுக்கும் பெண்கள் பேய்கள் என்பது உண்மை கற்பு நெறி தவறாத பெண்கள் உள்ளவீடு காமதேவனும்-கற்பகத்தருவும் உள்ள வீடாகும்!

இரண்டு மூன்று குழந்தைகள் பெற்றதும் கணவனும் மனைவியும் அண்ணன் தங்கைகள் போல் மாறிவிட வேண்டும்! ஒதுங்கிவாழ வேண்டும்-என்பது பகவான் ராமகிருஷ்ணரின் அருளுரையாகும்! பெண்களுக்கு ஆசை அறுவதில்லை! சில குழந்தைகள் பெற்ற பின்புகூட பலவிதமான ஆசைகளை அனுபவிக்க உள்ளம் தூண்டிக் கொண்டிருக்கும்! அதனால் காலை மாலை மதியம் போன்ற நேரங்கள் பெண்கள் சிவஸ்லோகங்களைப் படித்து மன அடக்கம் கேட்டுத் தவம் பண்ண வேண்டும்.

கணவனுக்கு எந்தப் பெண்ணும் துரோகம் செய்யக்கூடாது! அப்படி செய்தால் மூன்று பிறவிக்கு அனாதையாய் பிறக்க வேண்டியது வரும். பெண்ணுறவு-ஆணுறவுக்கு ஏங்கும் பிறவிக்குத் தள்ளப்படுவீர்கள்! கணவனிடம் அன்பாய் இருப்பது போல் நடந்துகொண்டே-பிற ஆடவனோடு உறவு கொண்டு வரும் பெண்-இரண்டு கணவனுடன் உறவு கொள்ளும் பெண்-தம் குழந்தையை துணைவனை உதாசீனப்படுத்திவிட்டு தன் சுகம் தேடியனுபவிக்கும் பெண்-அடுத்தப் பிறவியில் சொறி நாயாக-எல்லா நாய்களாலும் வெறுக்கும்படியான இழி நாயாகப் பிறப்பெடுக்கிறாள்!

கணவனைத் தவிர பிற எந்த ஆணிடமும் பெண்கள் விகாரமாக-பார்க்கவோ-சிரிக்கவோ கூடாது என்பதை மறக்க வேண்டாம்! இதுகூட தண்டனைக்குரிய-பிறவித் தண்டனைக்குரிய குற்றமாகும்! எச்சில் தின்னும் நாய்கள்

எந்த எச்சிலையும் பேதம் பார்க்காமல் உண்ணும்! காமவெறி பிடித்த பெண்களும் இதுபோல் தான்! நல்ல பெண்கள்

பூமியின் தெய்வங்கள்! தீய ஒழுக்கமுள்ள பெண்கள் சைத்தான்கள்! இவர்கள் சமுதாயத்தை அழுக்குப்படுத்த வந்த இழி பிறவிகள்! பெண் பிறவி மாயைதான்! மாயையை வணங்கி காளியாக்கி கண்கண்ட தெய்வமாக்கும் விந்தைகளும் பூமியில் நடந்து வருகிறது! அறியாமையால் மாயையின் உடும்புப்பிடிக்குள் சிக்கித்தவிக்கும் பெண்கள் மன அடக்கம் என்னும் உறுதி பெற சிவபெருமானை வணங்கித் தொழுது வரவேண்டும்! இதனால் காளியாகலாம் ஜெகன்மாதாவாய் எல்லாரும் போற்ற விளங்கலாம்!

அதனால் பெண்கள் மன அடக்கம்-உணர்ச்சி அடக்கம் வளர்த்து வாருங்கள். உங்களால் குடும்பம் நிலை குலைந்து போய் விடாதபடி வாழ்ந்து காட்டுங்கள். உங்களுக்குக் கணவன் தெய்வம், குழந்தைகள் திருக்கோயில்கள்! மாமன் மாமி, அம்மா அப்பா பிற உறவினர்கள் விளக்குகள்; நெய்வேதத்தில் பொருட்களை-வாசனைத் திரவியங்கள்; மலர்கள், மணம் பரப்பும் வத்திகள் என்பதை மறக்காதீர்கள்!!

உங்களின் நற்செயல்களால்-நற்பண்புகளால், பிரார்த்தனையால் உங்களின் குடும்பம் மேம்பட வேண்டும்; தீய உணர்ச்சிகள் அடங்க வேண்டும்! நீங்கள் தீபமாக ஜொலிக்க வேண்டும்! குடும்பப் பெண்களே-நீங்கள் இலக்கியமாகுங்கள்! இதிகாசக் காவியங்களாகுங்கள்! சரித்திர நாயகிகளாக-வரலாற்றுப் பெட்டகங்களாக இல்லறத்தின் உயிர்த்துடிப்புகளாக மாறுங்கள்; உங்களின் பிரார்த்தனைக்கு அருள்புரிய இறைவன் காத்தக் கொண்டிருக்கிறார்!

ஆண்கள் ஒழுக்கம் தவறும்போது-மனபலம் குறைந்த பெண்கள் எளிதாக வழுக்கி விடுகிறார்கள்! குடும்பத்தில் பிரச்சனைகள் வருவதற்குச் காரணமானவர்கள் ஆண்கள்தான்! சிலர் பெண்களுக்குத்தான் கற்புநெறி சொல்லப்பட்டுள்ளது என்று பொய்சொல்லி வருகிறார்கள்! உண்மையில் கற்பு நெறிகள் ஆணுக்கும் பெண்ணுக்கும் சேர்த்துத்தான்

சொல்லப்பட்டுள்ளது! ஆண்கள் ஏகபத்தினி விரதராக ஸ்ரீராமரைப் போல் வாழவேண்டும்! அடங்காத காமத்தை அடக்க எல்லாம் வல்ல மஹாசக்தி காளியை வழிபடவேண்டும்!

ஓம் ஹ்ரீம் ஆத்யாய வித்மஹே
பரமேச்வரி தீமஹி
தன்னோ காளி ப்ரயோதயாத்

என்ற மந்திரத்தை உச்சரித்தபடி கண்மூடி அமர்ந்தபடி "என்னிடமுள்ள காம உணர்வு விலகட்டும் அம்மா" என்று பிரார்த்தித்தவாறு சிறிது நேரம் இருக்கவேண்டும். ஆண்கள் காமத்தை அடக்க இதுபோன்ற பயிற்சியில் ஈடுபடுங்கள்! மனைவிக்குத் துரோகம் செய்வது மஹாபாவம். இந்த ஜென்மத்திலேயே இதற்கான தண்டனைகளை அனுபவித்து விட வேண்டியதிருக்கும்! நம்பி இருக்கும் நல்ல துணைவிக்குத் துரோகம் செய்துவிட்டு-நடுவீதியில் பார்த்தவள் மேல் காமுறுவது தேர்ந்தெடுத்த திமிர்க்குணம்! ஆண்களால் பெண்களுக்குத் துரோகம் செய்ய முடியுமானால் பெண்களால் ஆண்களுக்குத் துரோகம் செய்ய முடியும்! இதுதான் இப்போது நடந்து வருகிறது!

வீட்டுக்கு வீடு இந்த அநாகரீகம் வேகமாக பரவி வருகிறது! பெண்கள் கெட்டுப்போவதற்கும், அவர்கள் வழிதவறி திசைமாறுவதற்கும் ஆண்களின் அந்நியப் பெண்களின் பழக்கம் தான் காரணமாகும்! காமவெறியில் பெற்ற குழந்தைகளைக்கூட உதாசீனப்படுத்தி விடுகிறார்கள்! இந்தக் கொடுமை பயங்கரக் கொடுமையாகும்! பிள்ளைகள் வெறுக்கும்படி நடக்கும் எந்தத் தாய்க்கும் தந்தைக்கும் அடுத்து மூன்று பிறவிகளுக்கு நல்ல பிறவி கிடையாது என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன! தங்கள் சந்தோஷத்திற்காக பிள்ளைகளைக் கஷ்டப்படுத்துவதால் மறு ஜென்மத்தில் ஊனமுற்ற காக்கையாகப் பிறக்க வேண்டும். அடுத்து கீழான மிருகங்களாக பிறக்க வேண்டும். மூன்றாவது ஜென்மத்தில் அனாதையாகப் பிறக்க வேண்டியதிருக்கும்! இந்த

உண்மைகளை மனதில் கொண்டு தங்கள் ஆசை தாபங்களைக் குறைத்துக் கொண்டு குழந்தைகளை அறிவாளிகளாக வளர்த்து ஆளாக்க முயலுங்கள்!

அனேக குடும்பங்களில் திருப்தி என்று கூறிக்கொண்டு அதிகம் ஆண்கள் மதுக்குடியர்களாக மாறிவிடுகிறார்கள். மதுவில் மயங்கி மனைவியைத் திருப்திபடுத்தத் தொடங்கி அற்ப ஆயுளில் மடிந்து விடுகிறார்கள்! இது மன்னிக்க முடியாத குற்றமாகும். வீட்டுக்குள் மதுப்பழக்கம்-போதைப்பழக்கம் புகக்கூடாது! புகத் தொடங்கினால் குடும்பம் அழியப்போகிறது என்று அர்த்தம்! பல ஆயிரம் சம்பளம் வாங்கும் ஆண்கள் வீட்டில் தரித்திரம் தாண்டவமாடுவதற்கு மதுக்குடிதான் முக்கிய காரணமாகும்! குடி சிறிய அளவில் ஆனாலும் பெரிய அளவில் ஆனாலும் வீட்டுக்குள் அது புகுந்து விட்டால் அந்த குடும்பம் நாஸ்திதான்!

ஆண்கள் குடிகாரர்களாக மாறப் பெண்கள் அனுமதிக்கக்கூடாது! இதனால் குடும்பத்தில் சந்தோஷமே பார்க்க முடியாது! இதுபோல் கடன் பெருகவும் ஆண்கள் காரணமாக இருக்கக்கூடாது. செலவைக் குறைத்து-ஆடம்பரத்தை குறைத்து-ஆசைகளைக் குறைத்து-செலவைச் சுருக்க வேண்டும். கடன் வாங்கிச் செலவு செய்வதென்பது குடும்ப நிம்மதியைக் குறைத்துவிடும்!

ஆணும்பெண்ணும் இருவரும் கலந்து பேசி எந்த முடிவும் எடுக்க வேண்டும். மனைவிக்குத் தெரியாமல் கணவனுக்குத் தெரியாமல் எந்த முடிவுகளையும் எடுக்கக்கூடாது! செயல்படுத்தக்கூடாது! குழந்தைகளின் நலனை எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு, கணவனும் மனைவியும் தியாக புத்தியை வளர்த்துக் கொள்ள வேண்டும்! சந்தோஷங்களைத் தியாகம் செய்து கொள்ளப் பழக வேண்டும்.

சினிமா-நாடகம்-வேடிக்கை இவைகளுக்கு செலவு செய்யக்கூடாது. வழிபாடு பிரார்த்தனை, தவம் என்று

ஆத்மசாதனையில் ஈடுபட வேண்டும்! ஒருவருக்கொருவர் புரிந்து கொண்டு வாழுங்கள். கருத்துவேறுபாடுகளைத் தீர்த்துக் கொள்ளுங்கள்!

உங்கள் இருவருக்கும் போன ஜென்மப்பந்தம் உள்ளது. பிரிவை நினைக்காதீர்கள். யார் பக்கம் பலஹீனம் என்பதை கண்டுபிடித்துப் பரிகாரம் தேடிக் கொள்ளுங்கள்! இது மிக எளிதானது தான்! நீங்களே தப்புத்தண்டா பண்ணி பிரிவதுகூடாது. இது பாவம் மட்டுமல்ல இதனால் பல பிறவிகளுக்குத் கஷ்டப்பட வேண்டியதிருக்கும்! உங்கள் பிரச்சனைகளை இறைவனிடம் சொல்லிப் பிரார்த்தனை செய்யுங்கள்! உங்கள் பிரார்த்தனைகளை இறைவன் அக்கறையோடு கேட்பார். அருள்புரிவார்!

கற்பு குடும்பத்தின் தீபம்; விளக்குக்கு எண்ணையாக மனைவியும், திரியாக கணவனும் இருந்து வருகிறார்கள். இவர்கள் இருவரும் அவசியம் தியாகம் செய்துதான் ஆகவேண்டும்! இவர்களின் தியாகத்தால் தான் இனிய குடும்ப விளக்கு எரிந்தாக வேண்டும்! இந்த விளக்கு அணையக்கூடாது! குடும்பத்தில் இருள் நிலைத்து விடக்கூடாது. அதற்காக ஆணும் பெண்ணும் பாடு படுவார்களாக! கற்பு-செல்வம் தரும்; கல்வி தரும்; நல்லன எல்லாம் தரும். இதைப் பேணிக்காத்துப் பிரகாசிக்கச் செய்வீர்களாக

## புண்ணிய காரியம் செய்து

நாம் எல்லாரும் ஒரு நாள் இந்த உலகத்தை விட்டு போவது உறுதி! போவதற்கு முன் நாம் வாழ்ந்த காலங்களில் புண்யம் கொஞ்சம் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும். இந்தப் புண்ணியத்தை உயர்களுக்கு உதவுவதிலிருந்து நம்மால் சேர்த்துக் கொள்ள முடியும்! உணவின்றித் தவிக்கின்றவர்களுக்கு உணவு அளிப்பதும், உடையின்றி கஷ்டப்படுகின்றவர்களுக்கு உடை அளிப்பதும் உயர்ந்த தர்மமாகச் சொல்லப்பட்டுள்ளது.

ஒரு மந்திரவாதி தெருவிலே நின்று கத்திக்கொண்டு போனான். "ஏ மனிதர்களே செத்துப்போனவர்களை எழுப்புகிறேன்! யாருக்காவது விருப்பமா?" வந்து வேடிக்கை பாருங்கள் என்று அழைத்தான்! எந்த மனிதரும் அருகில் வரவில்லை! சிறிது தூரம் சென்றதும் ஒரு இடுகாடு வந்தது அங்கு நின்று கொண்டும் மந்திவாதி "ஏ மக்களே நான் செத்தவர்களை எழுப்பப் போகிறேன் உங்கள் உறவினர்களில் யாரேனும் இருந்தால் சொல்லுங்கள்"-என்று பலமுறை கத்தினான்.

ஒரு புதைகுழி அவனைப் பார்த்துப்பேசியது "ஏய் முட்டாள் மனிதனே செத்துப்போனவர்களைப் பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்? அது முடிந்த கதை! உயிரோடிருக் கின்றவர்களைக் காப்பாற்ற ஏதேனும் வழி இருக்கிறதா பார்! உயிரோடு இருப்பவர்களுக்குச் சேவை செய்யவே நீ பிறந்துள்ளாய் இதை மறக்காதே"-

என்று கூறியது! மனித வாழ்க்கைச் சேவையோடு பின்னிக் கிடக்கிறது! சேவை செய்து முடித்த மனிதன் தான் புண்யம் தேடிக் கொள்கிறான், நல்ல பிறவிக்குப் போகிறான்! குடும்பத்திலுள்ள அனைவரும் குடும்பம் குதூகலமாய் இருக்க ஒருவர்க்கொருவர் உதவி-பாசத்துடன் வாழவேண்டும்! புண்யம் தேடாத இல்லற வாழ்க்கை வாழ்க்கையல்ல! இந்த வாழ்க்கை பூரண மடைவதுமில்லை! அவரவர்கவென்றுள்ள கடமைகளை ஒழுங்காக செய்து-அவரவர்க்கென்று இறைவன் அளித்துள்ள நற்பயன்களைப் பெறவேண்டும்!

அன்பில்லாதவன் பக்தியில்லாதவன் பிற உயிர்களை நேசிக்கத் தெரியாதவன். துன்பப்படும் உயிர்களுக்கு உதவ முன் வராதவன் செத்துப் போனவனைப் போன்றவன்தான். அவன் உயிரோடு இருந்தும் ஒரு பயனில்லை!

சேவையை வளர்த்துக் கொள்வதால் ஞான நரம்புகள் விழிப்படைகின்றன! இதனால் படிப்படியாக நீங்கள் ஞானியாக மாறி வருகிறீர்கள்! பெருமைக்கும் புகழக்கும் உரியவர் களாகிறீர்கள்! முடிந்தவரை மற்றவர்களுக்கு உதவுங்கள்! பிறர் துன்பங்களில் பங்கெடுத்துக் கொள்ளுங்கள்! உங்கள் ஆயுள்கூட-உங்கள் குடும்பம் மகிழ்ச்சியில் திழைக்க நீங்கள்

புண்ய காரியங்களை செய்துதான் ஆகவேண்டும்! குடும்பத்தில் மகிழ்ச்சி நிலைக்கவும்-சண்டைச்சச்சரவுகள், கடன் தொல்லைகள், மலட்டுத் தன்மைகள் போன்றவை விலகவும் ஒவ்வொரு குடும்பஸ்தனும் முடிந்தவரைக்கும் சேவை செய்து மகிழ வேண்டும்.

பரம்பொருள் சிவபெருமானிடம் அன்னை பராசக்தி கேட்டார் "பிரபு நித்யமான தர்மம் எது? என்று!" அதற்கு பரம்பொருள் பரமசிவனார்-

"பிறருடைய பசியைப் போக்கக்கூடிய உணவு; இது நித்தியமான தர்மங்களில் ஒன்று! இது தேடியார் வந்தாலும் இதை அவர்களுக்குக் கொடுத்து பசியாற்ற வேண்டும்! இன்னொன்று: அனாதைகளும் ஏழைகளும் தங்கிக்கொள்ள இருப்பிடம் அமைப்பது! ஒய்வுக்கு-எதுவும் இல்லாத வர்களுக்கு இல்லம் அமைத்துக் கொடுப்பது நித்தியமான-நிலையான-அழியாத தர்மம்! இதுபோல்-இருண்ட வீட்டில் விளக்கேற்றி வைப்பது, விளக்கின்றி தவிப்பவர்களுக்கு-இருள் போக்க விளக்களிப்பது-விளக்கேற்றி வைப்பது உயர்ந்த நித்திய தர்மம்! பிறர் பசியாற்ற உணவுப் பொருட்களையும் தண்ணீரையும் கொடுப்பது அவர்கள் சமைத்து உண்டு மகிழ சகல வசதிகளையும் செய்து கொடுப்பது-

இதுபோல்-தாரளமாக எண்ணை வாங்கிக் கொடுப்பது. தலைக்கும் சமையலுக்கும் முடிந்த அளவு எண்ணை கொடுப்பது! உடலில் பூசிக் கொள்ள-விபூதி சந்தனம் போன்ற வாசனைப் பொருட்களை வழங்குவது நோயுற்றிருப்போருக்கு-மருந்தும்-மருந்து கிடைப்பதற்கான ஏற்பாடுகளும் செய்தல்! சமையலில் சேர்த்துக் கொள்ளக்கூடிய உப்பு போன்ற பொருட்களை-முடிந்த அளவுக்கு வாங்கிக்கொடுப்பது!-இது தான் நித்தியமான தர்மம் தேவி" என்று கூறி அருளினார் பரம்பொருள் பரமேஷ்வரன்!

ஆதிபுராணங்கள் மூலம் இறைவன் தர்மத்தை வற்புறுத்துவதை கவனியுங்கள்! நம்மால் முடிந்தவரைக்கும் தர்மம் செய்ய வேண்டும்; இதனால் புண்யபலன்கள் பெருகின்றன! மன அமைதியும் ஏற்படுகின்றன! பிணியில்

வளருகின்றன! பீடைகள் மறைகின்றன! கஷ்டங்களும் கடன்களும் காமக்குரோத எண்ணங்களும் மறைகின்றன!

புண்ணிய காரியங்களில் சேவைதான் வெளிப் படுகின்றன! சேவை தானத்தின் அமசம்! தானதர்மங்கள் சேவை காரியங்கள் செய்து-ஞான தானம் வழங்கி-பிறரை மகிழ்வித்து நீங்கள் புண்ணியம் செய்து உய்வீர்களாக! திருக்கோயில்களுக்குச் சென்று-அங்குள்ள குப்பைகளைப் பெருக்கி சுத்தம் செய்து-மகிழுங்கள்! ஓய்வு நேரங்களில் இப்படி நீங்கள் செய்வதால் ஓயாத மகிழ்ச்சியும் சந்தோஷங்களும் உங்களுக்கு ஏற்படுகின்றன! கணவனும் மனைவியும் சேர்ந்து திருக்கோயில் சேவையில் ஈடுபடலாம்! குடும்ப சந்தோஷங்களுக்காக இதுபோன்ற புண்ய காரியங்களை நீங்கள் செய்து வருக.

## தலையில் பூ

"ஒரு பெண் தலையில் வைக்கும் பூவானது ஆடிஆடி பின் தலையைத்தொடக்கூடாது. இதுபோல் தொட்டால் மணவாழ்க்கை சந்தோஷமாய் இராது. சண்டை சச்சரவாய் இருக்கும்". என்று வால்மிகி கூறுகிறார்.

தலையில் கண்ட கண்ட பூக்களை வைத்து அலங்காரம் செய்து கொள்ளக்கூடாது என்று சில புத்தகங்களில் எழுதியுள்ளோம்! வாசனை இல்லாத எந்தப் பூக்களையும் பெண்கள் தலையில் வைத்து அலங்காரம் செய்து கொள்ளக்கூடாது. இதனால் காற்றுக் கறுப்புக்கள் பின்தொடரும். திடீரென்று வியாதிவரும். தலைவலி தலைப்பாரம் இருந்தபடியே இருக்கும்! நெஞ்சுவலியும் அடிக்கடி வரும். குடும்பப் பெண்கள் வாசமில்லாத பூக்களை கூந்தலில் சூடிக்கொள்வதால் இந்த நிலைமை ஏற்படுகிறது!

வாசனையான பூக்களைச் சூடிக் கொள்ளலாம்! இதனால் தெய்வ ஆதரவிருக்கும்; தெய்வ அனுக்கிரகமும் கிடைக்கும்! நல்ல வாசனை பூக்களைச் சூடிக்கொள்வதால் தலை சம்பந்தமான-மார்பு சம்பந்தமான நோய்கள் வராது. அப்படி இருந்தாலும் குறையும்!

தலையில் புதிதாக மணமான பெண்கள் மிக அதிகமாக பூக்களைச் சூடிக்கொள்ளக்கூடாது! அப்படிச் சூடிக்கொண்டால் உடல் பலஹீனம் உண்டாகும்! களைப்பும் ஏற்படும். இந்த அசதி மயக்கத்துடன் சாந்தி முகூர்த்தம் அனுபவிக்கும் போது-மிக அதிகமான சக்தி விரயம் ஏற்பட்டு ஆயுள்குறைய வாய்ப்பு உண்டாகிறது. இந்தப் பெண்கள் புகுந்த வீடு வந்த காலத்திலிருந்து நோயளியாகவே இருக்கவும் வாய்ப்பு உண்டாகிறது. திருமணமான அன்று மாப்பிள்ளையையும் பெண்ணையும் பிரித்து வைத்து-மறு நாள் சேர்த்து வைப்பது பல விதத்திலும் நன்மை பயக்கும் மறு நாள் இருவரும்கூடி மணநாள் கனவுகளையும் நினைவுகளையும் பரிமாறிக் கொண்டு களைப்பு நீங்கப்பெற்று-கூடிக்குலவலாம்.

முக்கியமாக மணமகள் மணமகன் சேரும் கட்டிலில் பூக்களை சிதறிவிடக்கூடாது. இதன்மேல் படுத்து சிற்றின்பம் அனுபவிப்பது பெரிய பாவமாகும்! பூவில் வாழும் தேவதைகளையும் தேவர்களையும் அவமதித்த பாவம் நமக்கு வந்து சேரும் இறைவனைத் தவிர பூவை எந்த மனிதரும் மனிஷியும் மிதிக்கக்கூடாது! இது புரியாமல் பூமேல் ஆண்பெண்ணை படுக்க வைத்துப் பார்ப்பது கொடிய குற்றமாகும்.

எவர் ஒருவர் பூமேல் நடக்கிறாரோ அவர் மகானாய் இல்லாமல் குடும்பஸ்தனாய் இருந்தால் அவர் அடிக்கடி உடல் நலம் பாதிக்கப்படுவார். உடல் அவருக்கு பலம் குறையும்; வீக் ஆவார்! தலைவராக இருப்பினும் பூமேல் நடக்கும் தகுதி எவர்க்கும் இல்லை! இறைவனும் ஞானியும்தான் பூமேல் நடக்கலாம்; அமரலாம்! குறிப்பாக மெல்லிய பெண்கள் பூமேல் அமரவோ மிதிக்கவோகூடாது இந்தப் பழக்கம் முஸ்லீம்கள் ஆட்சி காலத்தில்-படை எடுப்புக் காலங்களில் ஏற்பட்டிருக்கலாம்! இது இந்து தர்மத்துக்கு எதிரான செயலாகும்!

குடும்பப் பெண்கள் தலையில் பூக்களை அணியும் போது தங்களின் தலைமுடி நீளத்துக்குமேல் பூக்கள் தொங்கும்படி பூச் சூடக்கூடாது! மஹாமுனிவர் வால்முகி இந்தக் கருத்தைத் தெரிவித்துள்ளார்! இதனால் முடியின் அழகு

குறையும். சீக்கிரம் நரை தோன்றும். முடியின் மென்மையும் பாதிக்கும்! இதுமாதிரி கேடுசெய்யும் தேவதைகள் நடக்கும் போது வந்து ஒட்டிக் கொள்ளும்.

இளம் பெண்கள் மஞ்சள் நிறப்பூக்களையும், நடுவயதுப் பெண்கள் வெள்ளை நிறப்பூக்களையும் வயதான பெண்கள் கதம்பப் பூக்களையும் அணிய வேண்டும். கண்ட நேரத்தில் கண்டகண்ட பூக்களை வாங்கிப் பெண்கள் அணிந்து கொள்ளக்கூடாது. சூரியன் உதிப்பதற்கு முன் குளித்து தலையைக் காயவைத்து-சாம்புராணி புகைகாட்டிய பின் உரிய பூக்களை சூரிய உதயத்தின் போது சூடிக் கொள்ளலாம். இதனால் அந்த நாளெல்லாம் மகிழ்ச்சியாக இருக்கலாம்.

தினசரி அதிகாலை குளிக்க வேண்டும். தலையை விட்டு விடக்கூடாது. தலை குளிப்பதற்கென்று தனி நாட்கள் கிடையாது! எல்லா நாட்களும் குளிக்கின்ற நாள் தான்! தலையை விட்டுவிட்டுப் பெண்கள் குளிப்பதும்-குளிக்காத தலைமேல் கண்ட பூக்களை எடுத்துச் சூடிக் கொள்வதும் தரித்திரமாகும்! தினசரி உடல் முழுதும் தண்ணீர் ஊற்றிக் கழுவுவதற்குப் பெயர்தான் குளித்தல் ஆகும். இதில் தலை ஒருநாள் உடல் (முண்டம்) ஒருநாள் என்று குளிப்பது பீடைகளை வரவழைத்துக் கொள்வதற்கு அடையாளமாகும்.

அழுக்குத் தலையிலும் பூச்சூடக்கூடாது! பேன் உள்ள தலையில் பூக்களைச் சூடுவதால் பேன் என்ற பூச்சி அதிகமாகும்! தலையில் அழுக்குச் சேர்ந்தால் பேன் உண்டாகும். இது சலித்தெடுத்த தரித்திரமாகும். இந்த பேன்வாழும் பீடைத் தலையில் பூவணிந்து கொள்வது இன்னும் அதிக தரித்திரத்தை உண்டாக்கும். அழுக்கில் தம்மை போட்டதை பூ தேவதைகள் வெறுக்கும்; சபிக்கும்! இதனால் திடீர் நோய்கள் வர ஏதுவாகும்!

தொலைக்காட்சிப் பெட்டிக்குள் போட்டோக்கள் வந்து ஆட்டம் போடுவதுபோல்-நோய்களும் பேய்களும் மனிதரைப் பின் தொடர்ந்தபடி இருக்கின்றன. மெத்தப்படித்த முட்டாள்கள் சிலர் இதைப் மூடப்பழக்கம் என்று ஒதுக்கி விடுகிறார்கள்! அப்படி ஒழக்கிவிட்டாலும் இந்த மாயா வினோதங்கள் ஓடுகிறவர்களையும் துரத்தியபடி

மூடநம்பிக்கை என்பவர்களையும் கீரை கடைவது போல் கடைந்துதான் வருகிறது!

மனிதன்-மனிஷியின் ஒவ்வொரு செயலுக்கும், நிகழச்சிகளுக்கும் தகுந்த காரணங்களை இறைவன் வகுத்து வைத்துள்ளார். எதையும் மனித வாழ்க்கையில் தள்ளி வைத்து விடமுடியாது! நிற்க! பூக்களை அணிவது தலையின் அழுக்கு நாற்றத்தைப் போக்கிக் கொள்ள! நீண்ட தலைமுடி இருந்தாலே அழுக்கும் தோஷமும் அதில் ஒட்டிக் கொண்டிருக்கும். இவைகளைப் போக்க பூக்கள் அணிவது மட்டும் போதாது! நல்ல குளியலும் தேவை. வாசனை பூக்களும் தேவை! தலையில் அளவுடன் பூவைச் சூடிக் கொள்ளுங்கள் படுக்கும்போது பூசவாசனையில் படுக்கக்கூடாது. பூக்கள், சென்டுகள், கஸ்தூரி போன்றவற்றைப் படுக்கை அறையில் மணம் பரப்புவது நல்லதல்ல! இந்த வாசனைகளுக்கு துர் தேவதைகள் வந்து படுக்கை அறையில் தங்கி இருக்கும்.

இதன் காரணமாக-சந்தோஷம்அனுபவித்த சிறு நிமிடங்களில் சண்டை தொடங்கும்! ஆண்மைத்தனம், பெண்மைத் தனம் குறைந்து தாம் பத்தியம் ருசிக்காது! நமக்குத் தீமை தரும் துர்தேவதைகள் படுக்கை அறைக்குள் வராதிருக்க-படுக்கை அறைக்கு-கட்டிலுக்கு-புதுப் பெண்ணுக்குக்கூட வாசம் வேண்டாம்! பூவாசம் மனிதர்களைவிட-இறைவனையும் சில தீய தேவதைகளையும் தான் ஈர்த்திழுக்கிறது! இறைவன் நாமத்தை நினைத்தபடி தாம்பத்தியத்தில் யாரும் ஈடுபட முடியாது; அதனால் பூவாசம் தேடி இறைவன் வருவதில்லை! கூப்பிட்டால்தான் இறை வருவார். துர்தேவதைகள் தான் கூப்பிடாமலே வருகின்றன! களைச் செடிகள் விதை போடாமலே வருவதுபோல்! அதனால் குடும்பிகள் ஏனோதானோ-என்று வாழ்வதை உடனே நிறுத்த வேண்டும்.

## வீட்டு நலன் கூட்டுக

வீட்டில் ஆட்டம்-அமர்க்களங்களை நடத்தாதீர்கள்! விளையாட்டுக்களையும் விளையாடாதீர்கள்! ஆண்

குழந்தைகளோ-பெண் குழந்தைகளோ அடிக்கடி நண்பர்களை அழைத்து வராது பார்த்துக் கொள்ளுங்கள்! இதனால் உறவில் பிரிவும், பிரிவில் குழப்பமும், குழப்பத்தால் குடும்ப விளைக்கணைக்கும் நிகழ்ச்சிகளும் நடக்கும். வீட்டு நலன் பார்க்கப் போனால் வீட்டில் அன்பு கருணையும் நிலைக்க வேண்டும் பெண்ணும் ஆணும் வீட்டில் மேம்பாட்டுக்காகக் கூடிப்பேச வேண்டும்! பேசிக் குழப்பங்களைத் தீர்த்துக் கொள்ள வேண்டும்! குறிப்பாக காம உணர்வுகளைப் பற்றி கணவனும் மனைவியும் பேசித்தீர்த்துக் கொள்ளவேண்டும்.

பலஹீனம் இருவரில் யாரிடம் இருக்கிறது எனக்கண்டு அதற்கேற்ற மருந்து விருந்துகளை உட்கொண்டு-தாம்பத்திய உறவுக்குத் தகுதியுள்ள தேகம் உண்டாக்க வேண்டும்! ஆண்கள் பெண்களைத் திருப்திபடுத்தும் கலைகளைக் கற்றிருக்க வேண்டும். பெண்கள் உங்களை விட்டுப் பிரிவதற்கு முன் நீங்கள் உஷாராக இருக்க வேண்டும். உங்கள் சக்தி உடனே வெளியாகி விடாதபடி வைத்திய பழக்கங்களில் ஈடுபடவேண்டும். சில வெறிப்பிடித்த பெண்கள் மஹாமாயைகள்! இவர்களைத் திருப்திபடுத்தும் முயற்சியில் இறங்க வேண்டாம். இப்பெண்கள் உங்களைப் பிரிவதே நல்லது!

சில ஆண்கள் ஒன்றுக்கு மேல்பட்ட பெண்களைத் தேடி அலைவார்கள்; இவர்கள் அலைந்து திரிந்து அவமானம் ஏற்பட்டு நல்ல-பழைய மனைவியை தேடிவந்து திருந்துவார்கள்! பல பெண்களை நாடும் ஆணும்-பல ஆண்களை நாடும் பெண்ணும் வரும் ஜன்மங்களில் திருமணத்திற்கு ஏங்குபவர்களாக விளங்குவார்கள்! துணை கிடைக்காமல் அல்லாடுவார்கள்!

கணவனும் மனைவியும் குழந்தைகளும் கூட்டமாக உட்கார்ந்து குடும்ப நலன்பற்றி கலந்துரையாட வேண்டும். குற்றங்குறைகளையும் சொல்லி பரிமாறிக்கொள்ள வேண்டும்-அது என் தவறுதான்...அதற்காக நான் வருந்துகிறேன்-என்று கூறி இருவருமே குழந்தைகளும் குற்றத்தை ஒப்புக்கொள்ள

வேண்டும். வாரம் ஒருமுறை இதுபோல் கலந்துரையாட வேண்டும் இதனால் நன்மைகள் ஏராளம்.

தங்கள் சொந்த மதிப்புக்கெட்டுவிடும் என்பதற்காக குழந்தைகளைத் தவிக்கவிடுவதும்-குழந்தைகளைப் பிரிந்து கண்டவர்களோடு காம லீலைகளில் ஈடுபடுவதும் மகாபாவம்! வரும் பிறவிகளில் இதற்குத் தண்டனையாக-அனாதையாகப் பிறக்க நேரும்! மனக்கட்டுக்பாடு வளர்த்துக் கொள்ள வேண்டும்! இதற்காக பக்தி வளர்த்துக் கொள்ள வேண்டும்! யோகாசனா-தியானம்-பிரார்த்தனைகளில் இரண்டு வேளை ஈடுபட வேண்டும்! சக்தி கொட்டும் வெறியாட்டம் விட்டுவிட்ட கணவனும் மனைவியும் இருக்கும் வீடு கோயிலாகும்! பெண் குடும்பத்தின் சக்தியாகவும், ஆண் சிவனாகவும் விளங்க வேண்டும்! பிறவிப் பயனை அடைந்தது என்பது இதுதான்!

உண்மைபேச வேண்டும் அகங்காரத்தால் வாக்கு வாதம் வம்புச்சண்டை கூடாது! பொறுமையை இருவரும் கடைப்பிடிக்க வேண்டும். மனைவிக்குத் துரோகம் செய்வதும், கணவனுக்குத் துரோகம் செய்வதும் இல்லற தருமமல்ல! இழிந்த பிறவிக்குப் போவதற்கான வழிகளாகும்!

இரண்டு மூன்று குழந்தைகள் பெற்றதும் தாயானவள் மனப் பக்குவப்படவேண்டும்! விரச தாபத்தை வளர்த்துக் கொள்ள கூடாது! ஆணாசையில் அலையக்கூடாது! தாய் என்பது மிக உயர்ந்த ஸ்தானம்! இறைவனுக்கு அடுத்த நிலை! இதைக் கெடுத்துக் கொள்ளக்கூடாது! தாய் தாயாக குழந்தைகளுக்கு மட்டுமல்ல-கணவனுக்கும், மாமன் மாமிகளுக்கும், பெற்றோர்க்கும் கூட விளங்க வேண்டும்! தாய் நிலை மறந்து தாரமாகவே இருக்க நினைக்கும் பெண் பைத்தியக்காரி!

கணவன் தகுதி இழந்துவிட்டான்; வலுகெட்ட இவனோடு இனி வாழ்வு வேண்டாம்; இனியொரு ஆண் துணையை நாம் பார்த்துக் கொள்ள வேண்டியது தான்-என்று சில பெண்கள் கோமாளித்தனமாக-நினைத்து கணவனுக்கும் நம்பி இருக்கின்ற பிள்ளைகளுக்கும் துணிந்து துரோகம் செய்யக்கிளம்புகிறார்கள்! இவர்கள் நரகத்தில் பல

ஆண்டுகள் கிடப்பார்கள்! வரும் பிறவிகளில் மூளை வளர்ச்சியின்றி பிறப்பார்கள் என்பதை மறக்க வேண்டாம்!

ஆணான கணவனை விட்டு கடைசிவரைக்கும் பிரியக்கூடாது. பெண்ணான மனைவிக்கும் சிறு துரோகம் கூட விளைவிக்கக்கூடாது! ஆண் பெண் இருவரும் கடைப்பிடிக்க வேண்டிய தலையாயக் கடைமை! இப்படி வாழும் கணவன் மனைவிகளை பலகோடி தேவர்களும்-தேவியர்களும் வாழ்த்திக் கொண்டிருப்பார்கள்! இறைவன் அருள்மாரி பொழிந்து வாழ்த்திக் கொண்டிருப்பார்!

கணவன் தாம்பத்தியத்திற்கு தகுதி இல்லாதது போல் ஆனாலும் பரவாயில்லை. அவனுக்குப் பெண்கள் துரோகம் செய்யக்கூடாது! தகுதி உள்ளவர்களாக மாற்றும் முயற்சியைத் தான் மேற்கொள்ள வேண்டும்! அதேபோல் கண்ட பெண்களைத் தேடி அலைந்தாலும் அந்த ஆணைப்பெண்கள் வெறுக்கக்கூடாது. அவன் மேல் அன்புகாட்ட வேண்டும்; அவனுக்காக ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். அன்பும் பிரார்த்தனையும் மிருகங்களைக்கூட மாற்றிவிடும்!

இதேபோல் குடும்ப நலனுக்காக ஆண்களும் சில தியாகங்களைச் செய்ய வேண்டும். மனைவியின் விருப்பம்போல் நடந்து கொள்ள வேண்டும். அவளைத் திருப்திபடுத்துவதில் ஆண்கள் கோழையாகிவிடக்கூடாது! குடும்பத்தை நடத்திக் கொண்டே இறைவனையும் பிரார்த்தித்தபடி இருக்க வேண்டும். யோகசாதனையில் ஆண்கள் ஈடுபடஈடுபட வந்த பிரச்சனை எந்தப் பிரச்சனையானாலும் அது சரியாகிவிடும்.

இருவரும் சிக்கனமாய் வாழும் சிறந்த கலையை கடைப்பிடிக்க வேண்டும். ஆடம்பரச் செலவைக்குறைக்க வேண்டும்! இது விஷயமாக ஆர அமர கலந்து பேசி முடிவெடுக்க வேண்டும். எந்தக் காரணத்தாலும் இருவரும் கோபப்படக்கூடாது. நான் என்ற அகங்காரம் கொள்ளக்கூடாது. ஆண்பாதி பெண்பாதி தான் குடும்பம். ஒருவர் இல்லையென்றாலும் குடும்பம் அழிந்தது என்று

அர்த்தம்! அதனால்-குடும்ப நலன்கூட குடும்ப விளக்கை அணையாமல் காக்க இருவரும் பாடுபட வேண்டும்!

நிறைய குடும்பங்களில் காம உணர்வு தான் பிரச்சனைகளுக்கு பிரச்சனையாய் இருந்து வருகிறது. எவராவது ஒருவர் இருவரில் வீக் காய் இருந்தால் குடும்பத்தில் நிம்மதி போச்சு! இழந்த நிம்மதி திரும்பிப் பெற இருவரும் மனஅடக்கம்-புலனடக்கம்மிக்கவர்களாய் சிறக்க வேண்டும்! வீட்டு நலன் சிறந்தால் நாட்டு நலனும் சிறக்கும்!

## மரணம் கூறும் பாடம்

ஒவ்வொரு தவறுக்கும் தண்டனை உண்டு ஒரு சிறு பிழைக்கும் கூட தண்டனை உண்டு! முன் பிறவி இந்தப் பிறவி எல்லாம் குற்றங்களுக்குத் தண்டனையாக உருவாக்கப்பட்டது. மனித பாவம் கூடக்கூட பிறவிகளும் கூடுகின்றன! நல்ல பிறவி வேண்டும்-பிறகு முக்தி வேண்டும் என்று வழிபாட்டிலும் தொழுகையிலும் இருப்பவர்கள் நினைக்க வேண்டும். மரணம் மனிதனைப்படாதபாடுபடுத்தும். நிறைய தவறு செய்தவர்கள் மரண காலத்தில் மிகவும் துன்பப்படுவார்கள். ஆறுமாதம் ஒரு வருடம் என்று நோயில்-படுக்கையில் படுத்திருப்பார்கள்! தாங்க முடியாத நோயினாலும் உயிர்போகவில்லையே என்ற கவலையிலும் அவர்கள் அவதிப்படுவார்கள்.

குறிப்பாக கணவனுக்குத் துரோகம் செய்த பெண்கள் கைகால்கள் இயங்காதபடி கிடந்து நோயாளிகளாகி பலருக்கும் பாரமாவார்கள்! பலரும் தூற்றும்படி இவர்கள் பிழைப்பு கேவலப்படும்! மரணம் கடுமையான தண்டனையளித்து மனிதனுக்கு ஞானமளிக்கிறது. நரகம்-பாதாளம்-ஆவிலோகம் என்று பிரித்து வைத்துக்கொண்டு மரணமடையும் மனிதனை அடித்துத் திருத்துகிறது.

மகான்களும், பக்த *சீ*லர்களும் மட்டுமே இம்சை இல்லாது மரணமடைகிறார்கள்! யோகிகளும் ரிஷிமான்களும் யோகத்திலேயே சமாதியடைகிறார்கள்! கர்மாக்களை அனுபவித்தவர்களும் அனுபவிக்கப் போகின்றவர்களும் கடினமான கஷ்டங்களை-மரண அவஸ்தையை அனுபவித்த

பின் மரணமடைகிறார்கள்! கொடியவர்களும், கொலை காரர்களும் பேய்களாகத் திரிகிறார்கள்! பிறவிக்கடலைக் கடக்க முடியாமல் அல்லாடுகிறார்கள்!

ஒரு கல்யாண வீட்டிற்கு எமதர்மர் ஒரு நாள் வந்தார். வழியில்-வாசலில் ஒரு சிறிய எலியைக் கண்டார். "நீ இங்கேயா இருக்கிறாய்?"...என்று கேட்டுக்கொண்டே எலியைத்தாண்டி கல்யாணம் நடக்கும் இடத்துக்குச் சென்றார்! எலி மிகவும் கவலைப்பட்டது. எமன் என்னைப் பிடித்துப் போகத்தான் வந்துள்ளார் என்று நினைத்து நினைத்து அழுது கொண்டிருந்தது. என்னை எங்கெங்கோ தேடி இருக்கிறார் கடைசியில் நான் இருக்கும் இடத்தைத் தேடியே வந்து விட்டார்...என்று அடிக்கடி நினைத்துக் கவலைப்பட்டது எலி.

மேலே பறந்து கொண்டிருந்த பருந்து ஒன்று அழுதுகொண்டிருக்கும் எலியைப்பார்த்து அருகில் வந்தது. "ஏன் அழுகிறாய் எலியே?" என்று அன்புடன் கேட்டது. "பருந்தண்ணே எமன் கல்யாண வீட்டிற்குள் போயிருக்கிறார். என்னைப் பார்த்து இங்கேயா இருக்கிறாய்?-என்று கேட்டுவிட்டு உள்ளே போய் இருக்கிறார் வரும்போது கட்டாயம் என்னைப்பிடித்து போய் விடுவார்...என்று கூறி மீண்டும் சத்தமாத எலி அழுதது. எலியின் துக்கத்தைப் பார்த்து பருந்து மிகவும் பரிதாபப்பட்டது. கலங்காதே எலியே உன்னைத்தூக்கிக் கொண்டுபோய், மலை உச்சியில் உள்ள கல் இடுக்கில் பத்திரமாக வைத்துவிடுகிறேன். எமனால் கண்டுபிடிக்க முடியாது கவலைப்படாதே"-என்று பருந்து எலிக்கு ஆறுதல் கூறியபடி அதைத்தூக்கிக் கொண்டு போய் மலை உச்சியில் வைத்தது! சிறிது நேரத்தில் திரும்பியும் வந்தது!

பருந்து வந்ததும் கல்யாண வீட்டில் ஒப்பாரி சத்தம் கேட்டது எமன் இங்கே தம் கைவரிசையைக் காட்டியிருக்கிறார். யாரோ இறந்திருக்கிறார்கள்-அதனால் தான் மங்கள சத்தம்போய்-அமங்களச்சத்தம் இங்கு கேட்கிறது-என்று நினைத்தது பருந்து!

சிறிது வினாடிகளில் எமன் வந்தார். வாசலில் எலியைத் தேடினார். அதைக்காணாமல் திகைத்தபடி நின்றார். இதைக்கண்ட பருந்து "எமராஜாவே எலியையா

தேடுகிறீர்கள்? நான்தான் அதைப் பத்திரமாகத் தூக்கிக் கொண்டுபோய் மலை உச்சியிலுள்ள கல் இடுக்கில் வைத்துள்ளேன். அதை உங்களால் பார்க்க முடியாது" என்று பெருமையாகச் கூறிச்சிரித்தது!

"நல்லது செய்தாய். இந்நேரம் அதன் கதை முடிந்திருக்கும். மலை உச்சியில் ஒரு பூனையால் அதற்கு மரணம் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அதனால் தான் கல்யாண வீட்டில் அது இருப்பதைப்பார்த்து நீ இங்கேயா இருக்கிறாய்? என்று கேட்டேன் என்று கூறினார் எமதர்மர்!" இதைக்கேட்ட பருந்து வியப்படைந்து "மரணத்திலிருந்து யாரும் தப்பிக்க முடியாது"-என்று கூறிக் கொண்டே பறந்து சென்றது!

மரணம் மறு பிறவிக்கு ஒரு உயிரை அனுப்புவதற்கு முன் சிறந்த பாடங்களைக் கற்பித்துதான் அனுப்புகிறது. பாவங்களுக்கெல்லாம் சேர்த்து-மரணம் பாடம் சொல்லிக் கொடுக்கிறது! நல்ல மரணம் அடைபவர்கள் நல்ல பிறவிக்குப் போகிறார்கள்! மரண அவஸ்தை அனுபவிப்பவர்கள் இழிந்த பிறவிகளுக்கு போகிறார்கள்.

குடும்பத்துரோகிகள் மாதக்கணக்கில் வருடக் கணக்கில் மரணப்பாடம் கற்றுக்கொள்கிறார்கள்! திட்டும் ஏச்சும் பேச்சும் வாங்கிக்கட்டிக் கொள்கிறார்கள். மலத்திலும், மூத்திரத்திலும் உருட்டிப் புறட்டப்படுகிறார்கள்! உண்ண முடியாமல் உணவு கிடைக்காமல் கூட அவஸ்தைப்படுகிறார்கள். வளர்த்த குழந்தைகள் திட்டித்தீர்க்க-ஆதரவற்ற அனாதைகளாய் துடிக்கிறார்கள். குடும்பத்தில் தாங்கள் செய்த தவறுகளையும்-அட்டூழிகங்களையும் எண்ணி எண்ணி கண்ணீர் வடித்துப் பாடம் படிக்கிறார்கள்! மரணம் தான் பாவிகளை-துரோகிகளை-கொலைகாரர்களை-கொடியவர்களை தெளிவடைய வைக்கிறது. நல்ல பாடம் கற்றுக் கொடுத்து சிந்திக்க வைக்கிறது.

ஒருவன் புண்ணிவானா-பாவியா என்பதை அவன் மரணமே நிர்ணயிக்கிறது. புண்ணியவானின் உயிர் மிக எளிதாக உடலிலிருந்து அகன்று விடுகிறது! முகத்தில் உள்ள

பல துவாரங்கள் வழியாக உயிர் போகிறது. புண்ணியவான் எளிதாக மரணமடைகிறார்கள்! பாவிகளோ பலகாலம் கஷ்டப்படுகிறான். மலஜலம் மூலமாக இவன் மரணமடைகிறான். இவனுயிர் மலஜல வாயில் வழியாக வெளியேறுகிறது. பிரம்ம ஞானிகளுக்கு சிரசு வெடித்து ஷீஸிம்னாநாடி என்னும் உயர்ந்த வழியாக மரணம் நேருகிறது- இந்த விஷயத்தை மஹாபாரதம் தெளிவாகக் கூறுகிறது!

## தொழில்

எல்லா குடும்பத்தானும் ஏதாவதொரு தொழிலைச் செய்து சம்பாதித்து தனக்கும் குடும்பத்திற்கும் செலவு செய்ய வேண்டும். உழைக்காமல் உண்பது-அதாவது-முன்னோர் சொத்தில் உண்பதும்-உறவினர் உழைப்பில் உண்பதும் உண்பவர்க்குத் தரித்திரம். குறிப்பாக பெண்கள் வருமானத்தில் சாப்பிட்டு காலத்தைக் கழிக்கும் ஆண் பீடையின் வடிவம்! தரித்திரத்தின் சின்னம்! இவன் இருக்கின்ற வீட்டில் கஷ்டமும் கவலைகளும்-பிரச்சனைகளும் தாராளமாக இருக்கும். இவ்வாறு பெண்ணுழைப்பில் சாப்பிடுகின்றவர்கள் அடுத்த பிறவியில் அதே பெண்கள் ஆணாகப் பிறக்கும்போது- மூட்டை சுமந்து-கூடை சுமந்து களைக்ககளைக்க உழைத்து ஏழைப் பெண்ணாய் பிறந்து அந்த ஆண்ககளுக்கு உழைத்துப்போட வேண்டும்! பெண்கள் உழைப்பில் உண்பது ஆண்களுக்குக் கேவலம். இதை தொடர்ந்து செய்துவரும் ஆண்கள் பாவ ஆத்மாக்கள் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன!

ஆண்கள் சுயமாக உழைத்துத்தான் சாப்பிட வேண்டும். பெண்கள் லட்சம் லட்சமாக சம்பாதித்தாலும் குடும்ப ஆண் உழைத்தே ஆகவேண்டும். இல்லையென்றால் சைத்தான் பொம்மைகளாக ஆண்மாற வேண்டியதிருக்கும்! பெண்களுக்கு அடிமையாக இருப்பதும் கேவலமானது! வருமானம் இல்லாத ஆண்கள்தான் பெண்களுக்கு அடிமைகளாக இருக்கிறார்கள்! ஆணும் பெண்ணும் சமமாக எப்போதும் எந்த காலத்திலும் இருக்க முடியாது! உடல் உறுப்புக்களும் அவையவங்களும் உணர்ச்சிகளும் ஆணுக்கும் பெண்ணுக்கும் மிகவும் வேறுபட்டிருக்கின்றன!

மென்மையும் முரட்டுத்தனமும் எப்படி சமமாக விளங்க முடியும்! வாய்ப்பேச்சில் வசப்படுத்துவதில் பெண்கள் ஆண்களை மிஞ்சிவிடாமல் ஆனால் அவனி வாழ்வில் ஆணும் பெண்ணும் வேறுபட்டு விளங்குகின்றனர்.

ஆண்பெண்ணை உழைத்துக் காக்கவேண்டும்; இதைச் செய்யாத வீட்டில் ஆண் பலங்குன்றிதான் காணப்படுவான்! ஒவ்வொரு ஆணும் ஒவ்வொரு தொழிலத் தேர்ந்தெடுத்து அதில் தேறி உழைத்துச் சம்பாதிக்க வேண்டும்! சம்பாதித்துத் தன்னை நம்பி இருக்கின்றவர்களைக் காப்பாற்ற வேண்டும்! எந்தத் தொழில் செய்தாலும் யாரையும் ஏமாற்றக்கூடாது. தம் கடமை என்று கருதி செய்யவேண்டும். அலுவலகங்களில் ஆஸ்பத்திரிகளில் பணியாற்றுகின்றவர்கள் தங்களின் பொறுப்புணர்ந்து வேலை செய்ய வேண்டும். தம்மை நம்பி குடும்பம் மட்டுமல்ல-இந்த சமுதாயமும் பெரிய நாடும் இருப்பதை நினைவில் வைத்துக் கொண்டு காலத்தை விரயம் செய்யாமல் வேலை செய்ய வேண்டும்.

இந்தத்தொழிலில் கூலி குறைவு இதனால் கொஞ்ச நேரம் வேலை செய்தால்-போதும் என்று நினைக்கக்கூடாது! குறித்த காலம்வரை உழைத்துத்தான் தீரவேண்டும். தனியார் கம்பெனிகளில் வேலை செய்கின்றவர்கள் லாப நஷ்ட கணக்குப் பார்த்து வேலை செய்யக்கூடாது. முன் பிறவியில் செய்த புண்யத்தில் ஒருவன் முதலாளியாகிறான்-பணக்காரராகிறான்-செல்வந்தனாகிறான்-என்பதை மறக்கக்கூடாது!

ஏழை பணக்காரன் என்பது முன்வினைப்படி மனிதனுக்கு நிர்ணயிக்கப்பட்டது! இதில் போட்டிப் பொறாமைக்கு இடமில்லை! அவரவர்க்குக் கொடுக்கப்பட்ட வேலையைச் செய்ய வேண்டும்! கமிஷன் வேலைகளை செய்பவர்கள் அளவில்லாமல் ஆசைப்படக்கூடாது. அப்படி ஆசைப்படுவது பாவம் மட்டுமல்ல-தரித்திரமும் ஆகும்! இந்தத் தொழிலில் எவ்வளவு பணம் சம்பாதித்தாலும் தரித்திரம் இவர்களை விட்டுப்போகாது!

ஏங்கிப் பெருமூச்சுவிட்டு பிறர் பணத்தைப் பிடுங்கி அனுபவிப்பது பாவம்தான்! நிரந்தரமான வேலை ஒன்றை-

வியாபாரம் ஒன்றை வைத்துக்கொண்டு-கமிஷன் வேலையும் செய்யலாம்! அப்படிச் செய்தால் கொடுப்பதைக் கொடுங்கள்-என்று கேட்டு அவர்கள்-கொடுக்கின்ற கமிஷனைப் பெற்றுக் கொள்ளலாம்-இதில் சிறிய அளவுதான் பாவங்கள் சேரும்! நூற்றுக்கு-ஆயிரத்துக்கு-என்று கணக்குப் பார்த்து பிறர் முதலிலும் தலையிலும் கைவைப்பது பாவமாகும்.

குறிப்பாக-அறவோர் என்கின்ற அந்தணர் பேரம் பேசும் எந்தத் தொழிலிலும் ஈடுபடக்கூடாது கொடுப்பதை பெறலாம்; கேட்டுப் பெறல்கூடாது! கமிஷன் தொழிலில் ஈடுபடும் அந்தணர்கள் வரும் பிறவிகளில் தரித்த ஆண்டிகளாகவும், தாழ்ந்த இனத்திலும் பிறப்பார்கள் என்று மனுநீதி சாஸ்திரம் கூறுகின்றது! அந்தணப் பெண்கள் வெளியேறி வேலைக்குப் போகக்கூடாது. வீட்டுக்குள்ளேயே-கைத்தொழில்கள் செய்யலாம்-அப்பள வகைகள்-ஊறுகாய் வகைகள்-வத்தல் வகைகள் போன்றவற்றை வீட்டில் தயாரித்துச் சந்தைக்கு அனுப்பலாம். இதை வாங்கி உண்பவர்களுக்கு தோஷமே கிடையாது! அந்தணரல்லாத மற்ற பெண்கள் இந்தவாறு உண்ணும் பண்டங்களை தயாரித்து விற்பது கூடாது. இந்த உணவு தோஷமானதாகும்! இந்தப் பெண்கள் பைகள்-கூடைகள் வேறுபல கைவினைப் பொருட்களைச் செய்து விற்று தொழில் பண்ணலாம்! பெரும்பாலும் எந்தச் சமூகத்தைச் சேர்ந்த பெண்களானாலும் வெளியே வேலைக்குச் செல்லக்கூடாது! இது கொஞ்சம் கஷ்டமான விஷயம்தான்!

கலிகாலத்தில் ஆண்கள் குடும்பத்திற்குச் சரியாக உழைத்துப் போடுவதில்லை! போட்டாலும் அது குடும்பச் செலவுக்கு போதவில்லை. இந்த நிலைமையில் பெண்கள் வேலைக்குப் போய்த்தான் ஆகவேண்டிய சூழ்நிலை உண்டாகிறது! இப்படி வேலைக்குப் போகும் பெண்கள் பக்தியை உள்ளத்தில் வளர்த்துக் கொள்ள வேண்டும்! அன்னிய ஆடவரிடம் பேசக்கூடிய சூழ்நிலை வரும்போது ஈஸ்வர-நாராயண-சுப்பிரமணிய-கணபதி மந்திரங்களை மனதில் உதித்தபடி பேசவேண்டும்! சாதாரணமாக அன்னிய ஆண்களிடம் நெருங்கிப் பழகினால்-குடும்பத்தில் பிரச்சனைகள் உருவாக வழிவகுக்கும்!

ஒரு தயிர்க்காரி தயிர் விற்கப் போய் வந்தாள். அவள் கணவன் அவளை சந்தேகப்பட்டான்! இதை பாரதிதாசனார் ஒருபாடல் மூலம் தெரிவிக்கிறார் பாருங்கள்: -

"கணவன் : தயிர் விற்கப்போனவளே
தட்டனிடம் பேச்சென்ன
மோர்விற்கப் போனவளே
முத்தனிடம் பேச்சென்ன?

மனைவி : தட்டனிடம் பேசாம
தயிர் விற்பதெப்படியாம்?
முத்தனிடம் பேசாம
மோர் விற்பதெப்படியாம்?

கணவன் : மோர் விற்க மட்டும்தான்
முத்தனிடம் பேசலாம்
தயிர்விற்க மட்டும்தான்
தட்டனிடம் பேசலாம்

மனைவி : மோர் விற்க மட்டும்தான்
தயிர்விற்க மட்டும்தான்
உயிர் விற்க என்மனம் தான்
உடன்படுமா சொல் அத்தான்?"

இந்த கற்புநெறியோடு அந்நிய ஆடவரிடம் வேலைபார்க்கும் இடங்களில் பெண்கள்-பேசலாம்! கற்புக்கு ஊறுவருமளவில்-காசுக்காக-தொழிலுக்காகப் பெண்கள் பேசிப் பழகக்கூடாது! இதுமாதிரி ஆகிவிடக்கூடாதே என்றுதான் முன்னோர்கள் பெண்களை வேலைக்கு அனுப்பாது வைத்திருந்தார்கள்! தவிரவும் திறந்து வைத்த கற்பூரம் காற்றக்கு உணவாவது போல்-திறந்த மனத்தோடு பழகும் பெண்கள் நிலையும் ஏற்படும்! கொண்டவனைத் தவிர எந்தக் கண்டவனிடமும் பேசிச் சிரித்து மகிழ்வது கூடாது. இது நடந்த உடனேயே தீய சக்திகள் இந்தப் பெண்ணைப் பிடித்தக்கொள்ளும்! பலப்

பிரச்சனைகளை குடும்பத்தில் இத்தீய சக்திகளே நிகழ்த்துகின்றன!

கணவனின் நலனுக்காகப் பெண்கள் வேலைக்குப் போகலாம்! கணவனுக்கு இடர்தரும் எந்தச் சூழ்நிலைகளையும் பெண்கள் உண்டாக்கிவிடக்கூடாது! தொழில் வேறு; குடும்பம் வேறு. குடும்பம் பெண்களுக்கு உயிர்! கணவன் தொத்தலாய் இருந்தாலும் பொத்தலாய் இருந்தாலும் அவனே நமக்குத் துணைவன். அவனையன்றி எந்த ஆடவனுக்கும் என் நெஞ்சில் இடம் கிடையாது!- என்று நினைக்கின்ற பெண்கள் தாராளமாக வேலைக்குப் போகலாம்!

## ஆண்கள்

அனேக குடும்பங்களில் உண்டாகும் குழப்பங் களுக்குக் காரணமே ஆண்கள்தான்! தவறான பழக்க வழக்கங்கள் ஆடம்பர செலவுகள்; அளவுக்கு மிஞ்சின ஆசைகள்-கண்ட பெண்களிடம் பல்காட்டும் குறைபாடுகள்; வருவாய்க்கு மிஞ்சி செலவு செய்யும் விரயங்கள்-பெண் வெறி-பணவெறி இவைகளைக் கட்டுப்படுத்த முடியாத பண்புகள்-உணவு விடுதிகளுக்கு சென்று உணவுண்ணும் பழக்கங்கள்-அடிக்கடி டீ காபி-பருகும் பழக்க வழக்கங்கள்-லாட்ரி போன்ற சூதாட்டங்களில் காசைக்கரியாக்கும் குறைகள் மதுக்குடி வெறிகள் பல ஆண்களிடம் பண்பாக இருக்கின்றன. ஏதாவதொரு கெட்ட பழக்ககங்கள் இல்லாத ஆண்களைப் பார்ப்பது அரிதாக இருக்கிறது! அப்படி எந்தக் கெட்டபழக்கமும் இல்லாத ஆண்கள் காமவெறி பிடித்தவர்களாகவோ-அல்லது இந்த வேலைக்கு லாயக்கற்றவர்களாகவோ இருக்கிறார்கள்! மனைவி விரும்புகின்றவரை அவளைத் திருப்திப்படுத்த வேண்டியது ஆண்களின் கடமை! அதற்கான உடல்நலப் பழக்கங்களை ஆண்கள் மேற்கொள்வதற்கு கலிகாலத்தில் தடைகளில்லை! எப்படியோ கணவன் மனைவியர் குடும்பத்தில் சந்தோஷமாய் இருந்தால் போதுமென்றே பெரியோர்கள்- நினைக்கிறார்கள்! பெரியவர்கள் நினைப்பதில் தவறில்லை!

குடும்பநலம் சிறக்க வேண்டும். குடும்பத்தில் அறமும் சேவையும் தளைக்க வேண்டும். ஆண்கள் இதை மறக்காமல் குடும்ப நலம் பெருக்க வேண்டும்!

கெட்டபழக்கங்களுக்கு அடிமையான ஆண்கள் அதை விட்டுவிட பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டும்! மூக்குப்பொடி-புகையிலை மெல்வது போன்ற பழக்கங்களை உடைய ஆண்கள் பின்னாளில் கொடிய தாங்கமுடியாத புற்றுநோய்களில் விழுந்து விடுகிறார்கள்! மூக்குப்பொடி போடுவதால் நெஞ்சுக்குமேல் கழுத்தைச் சுற்றி-சிரசுவரை புற்றுக் கட்டிகள் வர-பின்னாளில் அவஸ்தைப்படுவார்கள். இதுபோல் புகைப்பழக்கம் மிகவும் மோசமான பழக்கம்! இது உயிர்க்கொல்லி! மெதுமெதுவாக இது உங்களை கொன்று வரும்! இறுதியில் நிரந்தரமாகச் சாய்த்துவிடும்! இதுபோன்ற எந்தவிதக் கெட்ட பழக்கங்களையும் ஆண்கள் வைத்துக் கொள்ள வேண்டுமா? பெண்களும் தான!

காய்கறிகளில் பட்டாணி, மொச்சை மூக்குக் கடலை, சோயா, பீட்ரூட், அவரை, பீன்ஸ், உருளை காளிப்பிளவர், தண்டுக்கீரை போன்றவற்றை அதிகம் பயன்படுத்த வேண்டும். தக்காளிப்பழம், கமலா-ஆரஞ்சுபழம், பப்பாளி, அன்னாசி, ஆப்பிள், கருந்திராட்சை வாழைப்பழம், பேரீச்சம்பழம் போன்ற இன்றும் பல பழங்களை குடும்பஸ்தர்கள் உண்டுவரவேண்டும்! சைவ உணவுதான் ஏற்றது. மாமிச உணவு-கோபத்தை அதிகம் தூண்டி விடும்! இதை விலக்க வேண்டும்.

உணவில் கசகசா, தேங்காய், பருப்பு வகைகள்-பிஸ்தா முந்திரி, பாதாம்பருப்பு போன்ற பருப்புக்களை அடிக்கடிமெல்லலாம். ஒவ்வொரு உணவு வேளையின் போதும் வாழைப்பழம் எடுத்துக் கொள்ளவேண்டும்! ஆளை வளர்க்கும் வாழை! இல்லறத்தானும், இல்லறத்தாளும் மது-லாகிரிப் பொருட்களை உபயோகிப்பதற்குப் பதில் இதுபோன்ற உணவு முறைகளை உண்ணலாம். இல்லறம் இனிக்கும் கணவன் மனைவி உறவு பிரகாசிக்கும்.

கணவன் ஆண்மைத்தனத்துடன் விளங்க பெண்கள் ருசியாகவும், சத்துடனும் சமைத்துப் போடவேண்டும்.

குழம்பில் பெருங்காயம், இஞ்சி, மல்லி, கடுகு அதிகம் பயன்படுத்தலாம். இதனால் நோயற்ற ஆண்தனம் உண்டாகும்! ஆண்களை மசாலாக்கள் அதிகம் சேர்த்து (காரம் குறைத்து) அடிக்கடிச் சாப்பிட வைக்க வேண்டும். அவர் உங்களை திருப்திபடுத்துவார்! நெய் உணவில் கட்டாயம் இடம் பெறவேண்டும். பகலுணவில் தயிர் இருக்க வேண்டும்! இதுபோல் குழந்தையைப் போல் கணவனையும் மனைவியையும் ஆணும் பெண்ணும் பத்திரமாகக் கவனித்துக்கொள்வதால் இல்லறம் தித்திக்கும்!

வாரம் ஒருமுறை சேருங்கள்; வயதாக ஆக மாதம் ஒருமுறை கூடுங்கள்! மகாசக்தி குண்டலினியை இழந்து விடாதீர்கள்! அவளைத் தினசரி சேவியுங்கள். மூன்றுமுறை உங்களை நீங்களே சுற்றிக் கொண்டு-குளித்து ஆனதும் "குண்டலினி மாதாயை நம"-என்று சொல்லிச் சேவிக்கலாம்! அடிக்கடி ஆண் பெண் கூடும் வீடும் அழிந்துவிடும்! நிம்மதியாக வாழவும் சீராக வாழவும் ஆண்பெண் இருவரும் மணக்கட்டுப்பாடும் மன ஒழுக்கமும் உடையவர்களாய் விளங்கவேண்டும்!

குறிப்பாக ஆண்கள் மனபலம் உள்ளவர்களாகவும் மன ஒழுக்கம் நிறைந்தவர்களாகவும் இருக்க வேண்டும்! உங்கள் குடும்ப நலனுக்காக இந்தத்தியாகங்களை நீங்கள் செய்துதான் ஆகவேண்டும்!

## அதிகமான தூக்கம்

சோம்பலென்னும் அரக்கன் தூக்கமென்னும் மயக்க மருந்தைக் கொடுத்து அதிகமான ஆண்களையும் பெண்களையும் தூக்க வைத்துப்பார்க்கிறான்! தூக்கம் சிலர் சுகம் என்று நினைக்கிறார்கள்; உண்மையில் தூக்கம் துக்கம் தான் என்பது தான் உண்மையாகும்! தூக்கம் கூடக்கூட துக்கமான-துன்பமான நிகழ்ச்சிகளே நடக்கும். ஒருவன் இரவில் குறித்த நேரம் தூங்கினால் அவ்வளவு தீமைகள் வராது. நம்மால் பாதிக்கப்பட்ட பாதிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்ற சிறுசிறு பூச்சிகள்-கரப்பான்கள், எலிகள்

போன்றவைகளால்தான் இரவுத் தூக்கத்தில் துன்பம் வரும்! பகலில் ஒரவனோ-ஒருத்தியோ-

தூங்கித்தூங்கி எழுந்தால் பலவிதமான துன்பங்கள் வருகின்றன. நோய்-பேய்-இருள்-பீடை போன்றவை வீட்டிற்குள் வந்து சேர்கின்றன. கடன்கள்-பிரச்சனைகள்-சண்டை சச்சரவுகள் ஆகியவைகளும் வந்து தூங்குகின்ற வர்ககளைப் பிடித்துக் கொள்கின்றன! இரவில் வேலை பார்த்துவிட்டு பகலில் தூங்குகின்றவர்கள் சிறிதளவே பாதிக்கிறார்கள். சோம்பலால்-அறிவின்மையால் அற்ப சுகத்திற்கு அடிமையாகி பகலில் தூங்கி வழிகின்றவர்கள் பீடைகளின் மொத்த வடிவமாக மாறுகிறார்கள். வழியே போகின்ற பீடைகளைத் தங்கள் வீட்டிற்கு வந்துபோ-என்று அழைக்கிறார்கள்!

இரவு வேலை முடித்து வந்தவர்கள் வந்தவுடன் படுத்து விடவேண்டும். பகல் பொழுது சிறிது நேரம்-அதாவது காலை 10 மணிவரைக்கும் தூங்க வேண்டும், பத்துமணிக்கு எழுந்து காலைக் கடன்களை முடித்து சிற்றுண்டி அருந்தி-சிறுசிறு வேலைகளைச் செய்ய வேண்டும். பகல் ஒருமணிவரை விழித்திருக்க வேண்டும், பிறகு ஒரு மணிக்கு உணவுண்டு தூங்த போகவேண்டும். மாலை 4 மணி வரைக்கும் தூங்கலாம். பிறகு குளித்துவிட்டு கடமைமுடித்து-ஓய்வெடுத்து (அதாவது குடும்பத்தாருடன் பேசி இருந்து விட்டு)-வேலைக்குப் போகலாம்!

கண்ட கண்ட நேரங்களில் யோகிகள் நிஷ்டையில் இருப்பது போல் தூங்கிக் கொண்டிருப்பது இல்லறத்தானுக்கு அழகல்ல! இதனால் ஆயுள் குறையும், புதிய ஆஸ்தி சேராது! இருக்கும் ஆஸ்தி அழியும்! நோய்கள் எப்போது வேண்டுமானாலும் வரும். வறுமைகள் வீட்டிற்குள் குடியிருக்க வரும்! எவ்வளவு-வருமானம் வந்தாலும் போதாத சூழ்நிலை உண்டாகும்! காம கோப உணர்வுகள் அதிகமாகும்! குடும்பத்தில் குருச்சேத்திர போர் மூண்டவண்ணம் இருக்கும். பலம் குறையும் ஆண்மைத்தனம் பெண்மைத்தனம் அகலும் கூட்டினால் அவசரமாய் சக்தி இழப்பு ஏற்படும். இதனால் கணவன் மனைவி விரிசல் உண்டாகும்! சந்தியா வேளைகளில்

தூங்கினால் சம்சார வாழ்க்கை அவிழ்த்து விட்ட நெல்லிக்காய் மூட்டைபோல நாலா புறமும் சிதறி ஓடும்!

சோம்பல் தூக்கங்களைத் தவிர்க்க வேண்டும் வீட்டின் செல்வம் அழியாது காக்க வேண்டுமானால்-இதைச் செய்ய வேண்டும்! வீட்டில் நிம்மதி தேவையானால் கண்ட கண்ட நேரத்தில் தூங்குவதைக் கைவிடவேண்டும்! பச்சைக் குழந்தைக்கு 20 மணி நேரம், ஒரு வயதுக்குட்பட்ட குழந்தைக்கு 16 மணி நேரம், ஒரு வயதிலிருந்து மூன்று வயது வரையுள்ள குழந்தைகள் 12 மணி நேரம், நான்கு வயதிலிருந்து 15 வயது வரையுள்ள குழந்தைகள் 10 மணிநேரம், 13 வயதுமுதல் 20 வயது வரையுள்ளவர்கள் 8 மணி நேரம்-20துக்கு மேல் 40 வயது வரையுள்ளவர்கள் 8 மணி நேரமும் தூங்கலாம் 7 மணி நேரமும் தூங்கலாம்; 6 மணி நேரமும் தூங்கலாம்! 60 வயதுக்கு மேற்பட்டவர்கள் எப்போது வேண்டுமானாலும் தூங்கலாம்; இவர்களும் சின்னக்குழந்தைகள் மாதிரிதான்.

தூங்குவதற்கு வரன்முறைகள் வைத்திருக்கிறார்கள்! பெரியவர்கள் அடிக்கடித் தூங்குவதால் ஆயுள் குறையும்! கண்ட கண்ட நேரங்களில் தூங்கும் பெரியவர்கள் எதையாவது அலுவல்களைச் செய்தபடி இருக்கலாம். இதனால் ஆயுள்கூடும்! ஆலோக்கியம் நிலைக்கும்! மொத்தத்தில்-தூக்கம் என்பது ஓய்வுக்காகத்தான். உடல் வலியும் இடுப்பு வலியும், கைகால்வலியும் வருவதற்காக ஓயாமல் தூங்கி வழிவதை உடனே நிறுத்தி-

உங்கள் குடும்பத்தில் செல்வம் செழிக்கச் செய்யுங்கள்! சந்தோஷம் நிலைக்கச் செய்யுங்கள்! நிம்மதி நிற்கச் செய்யுங்கள்!

## பூஜை செய்யுங்கள்

தினசரி இருவேளை உங்கள் வீட்டில் பூஜை செய்யுங்கள்! இதற்காக நீங்கள் எவ்வளவு நேரம் ஒதுக்கினாலும் உங்களுக்கு நன்மைதான்! அமைதியாக தனிமையில் இருக்கும் போது மனம் மிகவும்

பக்குவடைகிறது. அமைதியாக தனிமையில் அமர்ந்து இறைவன் நாமத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும் போது இன்னும் நன்றாக பக்குவமடைகிறது. மனம் பண்படவும் செய்கிறது. இப்படி இருக்க-இருக்க மனம் தியானம் கற்றுக் கொள்கிறது. தியானத்தில் சாந்தியும் தெளிவும் ஏற்படுகிறது! இதற்காக இருவேளை பூஜை செய்யுங்கள்! தனித்தனியாக பூஜையில் ஈடுபடுங்கள்! விலகி இருந்து தியானம் செய்யுங்கள்! ஆன்மீக வித்தையை நீங்கள் வளர்த்துக் கொள்ளும்போது உங்கள் குடும்பப்பிரச்சனை மட்டுமல்ல-உங்களுக்கும் தனிப்பட்ட முறையில் பலன் கிடைக்கிறது.

நம்பிக்கைதான் கடவுள்! நம்பித்தான் ஆகவேண்டும். மனித ஆற்றல் ஒரு அளவுக்குள்தான். அளவு தாண்டி மனிதனால் போகமுடியாது! மனித ஆற்றலை இயக்குகின்றன அந்தமாபெரும் சக்தியை நம்பித்தான் ஆகவேண்டும்! தெய்வம் இல்லாமல் ஒன்றுமில்லை. தெய்வ இயக்கப்படிதான் எல்லாம் நடக்கிறது. அப்படியானால் குடும்பஸ்தன் இறைவனை நம்பித்தானே ஆகவேண்டும்? உங்களின் பிரச்சனைகளுக்காக நீங்கள் பிரார்த்தனை செய்யுங்கள்! வாய் திறந்து மனம் திறந்து வேண்டுங்கள்! வேண்டுவது நிச்சியம் கிடைக்கும்! நல்லது கட்டாயம் நடக்கும். சோதிப்பதும் சோதனைகளை வைப்பதும் கூட இறைவன் தான்! இறைவனைக்காலை மாலைப் பிரார்த்திப்பதால் குடும்பத்தில் சிறப்புச் சேர்கிறது சந்தோஷம் நிலவுகிறது!

உங்கள் பூஜையில்-பிரார்த்தனையில் பிறர்க்கு கேடு வரும்படி பிரார்த்திக்காதீர்கள்! பிறர் நன்மைக்காக அவர் எதிரியாக இருந்தாலும் அவர் நன்மைக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்! இதனால் உங்களுக்கு நன்மை கோடிகோடியாகும் கணவனுக்காக மனைவியும், மனைவிக்காக கணவனும் குழந்தைகளுக்காக இருவரும், மற்றும் பெரியவர்களும் பிரார்த்திக்க வேண்டும்! நம்மேல் பொறாமைப்படுகின்ற-வெறுப்படைகின்றவர்களின் நன்மைக்காக-குடும்பத்தில் உள்ள எல்லாரும் அமர்ந்து பிரார்த்திக்க வேண்டும்! நமக்கு ஆகாதவர்கள் நமக்கு இல்லை என்ற ஞானம் இதுபோன்ற பிரார்த்தனைகளில் உண்டாகிறது! மற்றவர்கள் நம்மை வெறுத்தாலும் நாம்

அவர்களை வெறுக்கக் கூடாது. அவர்கள் மேம்பாட்டுக்காக பிரார்த்தனை செய்ய வேண்டும். இது கொஞ்சம் கசப்பான உண்மையாகும்! இதைச் செய்து வரவர உங்களையறிமல் உங்களுக்கு நன்மைகள் குவிவதைப் பார்க்க முடியும்! குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவுவதைப் பார்க்க முடியும்.

நாம் உலகத்தில் பிறந்தது பலர்க்கும் நன்மை செய்யத்தான்! பலர்க்கும் பயன்படத்தான்! ஒரு அற்ப மெழுகுவத்திகூட ஒளி கொடுத்து அழிகிறது. ஒரு சின்னஞ்சிறிய ஊதுவத்திகூட எல்லாருக்கும் மணம் கொடுத்து மறைகிறது. மின் விசிறிகூட பலர்க்கும் காற்றளித்து மகிழ்கிறது. உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருட்களையும் சற்று நினைத்துப் பாருங்கள். பலருக்கும் நலமளித்து அழிகிறது! நாம் பிறர்க்கு நன்மை செய்ய-பிரார்த்தனை செய்ய தயக்கமடையலாமோ?

பூஜை வேளைகளில் நம் இஷ்ட தெய்வத்திடம் மனமுருகி நம் கஷ்டங்களைச் சொல்லி பிரார்த்திக்கலாம்! இறை ஆழ்ந்த கவனிப்போடு நம் வேண்டுதலை கேட்டுக்கொள்வார்; அருள்புரிந்து உதவுவார்! பிரச்சனைகளை-கஷ்டங்களைத் தெரிவிக்க வேண்டும்! நேரம்வரும் வரை பூஜையும் பிரார்த்தனையும் தொடரவேண்டும்! உடனே நடக்கவில்லையே என்று தெய்வத்தை நிந்திக்கக்கூடாது. விதைபோட்டவுடன் பழம் சாப்பிட முடியாது. வளர்ந்து மரமாகி காயாகி கனியாகிய பின்தான் சாப்பிடமுடியும்! பிரார்த்தனை பலிக்கவில்லை எனக்கருதி தெய்வத்தை திட்டுவது மகாபாவம்! இறைவன் தம்மை நம்பிய பக்தர்களைக் கைவிடுவதில்லை. நிச்சியம் பிரார்த்தனைக்குப் பலன் உண்டு-நம்பிப் பிரார்த்தித்து வாருங்கள்!

## கற்பில்லாதவர் வாழ்வு

கணவனால் கைவிடப்பட்ட பெண்கள் கடவுளைத் தொழுதவண்ணம் கடமைகளைச் செய்து வரவேண்டும்! கணவனை விட்டுவிட்டு கண்டவனோடு ஓடிப்போன பெண்களை மீண்டும் ஆண்கள் சேர்க்ககூடாது! அதுபோல்

ஓடிப்போய் வந்த பெண்களோடும் சேர்ந்து வாழக்கூடாது. இத்தகையவர்களின் வாழ்க்கை-எச்சில் வாழ்க்கை; கேவலமான வாழ்க்கை! இவர்களின் துன்பம் தொடர்கதைதான்! முடியாத தொடர்கதையாக வாழ்வதைவிட முற்றியகதையாக-வைராக்யமாக வாழ்வதே மேல்!

கற்பில்லாத பெண்களுடன் வாழ்வதைவிட கழுதையுடன் சேர்ந்து வாழ்வது மேல் என்று கிராமத்திலே சொல்வார்கள்! கழுதை எத்தனை உதை உதைத்தாலும் அதோடு வாழ்ந்துவிடலாம். அன்பு கிடைக்கும். போலியற்ற அன்பு! கற்பில்லாத பெண்களுடன் வாழும் எண்ணத்தை ஆண்கள் விட்டுவிட வேண்டும்! உடைந்த கண்காடிப் பாத்திரத்தை ஒட்டவைத்து வாழ்வது போன்ற வாழ்க்கையுடன் ஒரு வாழ்க்கையா? உடைந்த மண்பானையில் ஓட்டையடைத்து சமைத்தாலும் அது உருப்படியாக இருப்பதில்லை. இதுபோன்று-உடைந்த கண்ணாடிப் பாத்திரங்களாக மாறின பெண்களோடு வாழ்வதை எண்ணி பார்க்காதீர்கள்! போனவளை போனவளென்று ஒதுக்குங்கள்!

இதுபோல் மனைவியை கைவிட்டுவிட்டு இன்னொருத்தியோடு ஓடின கணவன் திரும்பி வந்தாலும் அவனோடு சேர்ந்து வாழாதீர்கள்! பெண்கள் இந்த விஷயத்தில் ரெம்ப வைராக்கியமாய் இருக்கவேண்டும்! நாய் போன்ற இல்லறவாழ்க்கை நாலுபேர் தூற்றும் அல்லற வாழ்க்கையாகும்! கற்பு நெறி பின்பற்றாத ஆண்பெண் சேர்ந்து வாழ்ந்தாலும் அவ்வில்லறம் சீராக இயங்காது என்பதில் சந்தேகமில்லை!

கற்பில்லாத பெண்டிரின் வாழ்வு என்னதான் பணம் இருந்தாலும் நிம்மதியாகக் கழிவதில்லை! ஒழுக்கம் கெட்ட இந்தக் கற்பில்லாத பெண்களை பூரண அன்புடன் எவரும் நேசிப்பதில்லை; சில நல்ல தேவதைகள் அப்படி நினைக்க விடுவதில்லை! கெட்ட பெண்கள் தரித்திரத்தின் அடையாளங்கள்! தீமையின் வடிவங்கள்! இவர்கள் இருக்கும் வீடு உருப்படாது. இவர்கள் முகத்தில் விழித்துவிட்டு வெளியே போனால்கூட துன்பம் நேரும்! உணர்ச்சிகளை அடக்கி வாழும் வாழ்வுதான் உண்மையான வாழ்வு! குடும்பத்தில் உள்ள

பெரியவர்கள் தவறு பண்ணும் போது சிறியவர்களும் தவறு செய்வார்கள். இதுபோல் தவறுகள் பெருகுவது குடும்பத்தில் இருள் சூழ்ந்ததற்கு அடையாளம்!

"ஒருத்திக்கு ஒருத்தன்; ஒருவனுக்கு ஒருத்தி"-என்ற இல்லறப் பொன்மொழியை எல்லாரும் கடைப்பிடித்து வாழ வேண்டும். கசங்கிய மலராகப் பெண்கள் விளங்கக்கூடாது! புத்தம் புதிய மலராகவே எப்போதும் விளங்க வேண்டும்! கணவனைத் தவிர-அன்னிய ஆடவரைப் பார்க்கக்கூடாது. சிரிக்கக்கூடாது. அவர்களோடு பேசிப்பழகக்கூடாது! கணவன் வீட்டில் இருக்கும் போது அன்னியரை அனுமதிக்கலாம். கணவன் இல்லாத நேரம் எந்த அன்னியரையும் வீட்டுக்குவர அனுமதிக்கக்கூடாது. அப்படி வந்தாலும் அவர் வந்தபின்பு வந்து பாருங்கள் என்று கூறி அனுப்பிவிட வேண்டும்.

மறைப்பு-பொய்-பொறாமை-வெறுப்பு எதிர்த்து வாயாடுதல்-போன்றவை எந்தக் குடும்பத்தில் இருக்கிறதோ அந்தக் குடும்பத்திலுள்ளவர்களின் இல்லறவாழ்வு கற்பில்லாத வாழ்வுதான்; இத்தகைய வாழ்வு முன்வினைப்பயன்-என்றுதான் கொள்ள வேண்டும்! ஜெப தவம் தான் இது மாதிரியான பிழை வாழ்வை ஓட்டவல்லது! அதனால் எல்லாரும் ஜெபதபத்தில் ஈடுபட்டு ஒழுக்க சீலர்களாக மாறுங்கள்!

## சீரான வாழ்வுக்கு சில

சாஸ்திரங்களைப் பின்பற்றி வாழ முயற்சி செய்யுங்கள்.

வாஸ்து சாத்திரப்படி வீடுகட்டுங்கள்; மற்ற அனைத்தும் கட்டுங்கள்!

கிழக்குப் பார்த்த வாசல்கள்தான் எல்லார் ராசிக்கும் பொருந்தும்; அதனால் கிழக்குப் பார்த்த வாசல் இருக்க-முக்கியமாகத் தலைவாசல் இருக்கப் பார்த்துக் கொள்ளுங்கள்.

வெள்ளி செவ்வாய் நாட்களிலும், ஞாயிறு திங்கள் நாட்களிலும்ஆண்பெண் கூடாமல் இருங்கள்!

குளிர்காலத்தில் பெண்கள் தோஷம் பராவமல் எச்சரிக்கையாய் இருங்கள்! மாதவிடாய் சுத்தமாக நிற்கும் முன் ஆண்கள் அருகில் வராதீர்கள்! 5 நாட்களுக்குப் பிறகு சமையல் அறைக்குப் போங்கள். 9 நாட்களுக்குப் பிறகு பூஜை அறைக்குப் போங்கள்!

தோஷமுள்ள பெண்களைத் தொட ஆண்கள் நினைக்காதீர்கள்! முடிந்தால் நீங்கள் சமைத்துப் போடுங்கள். தொடாமல் சேவை செய்து உதவுங்கள். தோஷமுள்ள மாத நாட்களில் ஆண்களும் பெண்களும் ஜெபம் தவம் செய்து ஆன்மீகப் பயிற்சியினை வளர்த்துக் கொள்ளுங்கள்.

கடன்வாங்கி வீடுகட்டாதீர்கள். பேக்ட்ரி லோன் மட்டும் போதும்! வட்டிக்குப் பணம் கொடுக்காதீர்கள். வட்டி வாங்கி வளம் தேடாதீர்கள்.

வாங்கிய கடனை பாங்குடன் அடைக்கத் திட்டமிட்டுக் கொள்ளுங்கள்! செலவில் கடனுக்குக் கட்டாயம் தொகை ஒதுக்குங்கள்!

எந்த ஆடம்பரச் செலவும் வேண்டாம். எவர் பொருள் மேலும் ஆசைப்படாதீர்கள்!

பல வீடுகட்டிப் பரிதவிப்பதிலும் ஒருவீடுகட்டி உளம் மகிழ வாழலாம். மண்ணாசை குறைத்து நாம் மண்ணுக்குள் போவதை நினைத்து வாழுங்கள்.

கருத்து வேறுபாடுகளை வளர்த்துக் கொள்ளாதீர்கள்! அடிக்கடி நல்ல புத்தகங்களைத் தேடிப்படித்து வாருங்கள். தீய உணர்ச்சிகளைத் தூண்டும் புத்தகங்களை நூல்களைப் படிக்காதீர்கள்.

ஆசைதான் அனைத்துத் துன்பத்திற்கும் காரணம்; அதனால் ஆசைகளைத் தியாகம் செய்து பழகுங்கள்!

கணவனை காமுகனாக்கும் பெண்களும் மனைவியை அடிமைப்படுத்தும் ஆணும் நரகத்துக்குப் பாதை அமைக்கும் பிறவிகள்.

அதிகாலை வீட்டில் அழுகுரல் கேட்காது பார்த்துக் கொள்ளுங்கள்!

முரட்டுக்கோபம் மிருகக்குணம் இதைவிடும் பயிற்சியை மேற்கொள்ளுங்கள்!

குழந்தைகளை-மனைவியை அடித்துக் கொடுமைப் படுத்துவதைச் செய்யாதீர்கள்! இது மறுபிறவிக்குப் பெண்ணாகப் பிறக்க வழிவகுக்கும்!

தினசரி இருவேளை குளித்து இருவேளை பிரார்த்தித்து இறைவன் பேரருள் பெறுங்கள்!

தேவையில்லாத செடிகொடிகளை வளர்த்து உங்கள் மனையைப் பாழாக்கிக் கொள்ளாதீர்கள்!

தேவையில்லாத வண்ணங்களைப் பூசி வீட்டை அழகு என்ற பெயரில் அலங்கோலப்படுத்தாதீர்கள்! உங்களுக்கு ராசியான வண்ணத்தைக் கண்டறிந்து அந்நிறங்களையே பயன்படுத்துங்கள்! அதிஷ்ட எண்கள் விதி எண்களுக்கு உட்பட்டு கதவுகளை-ஜன்னல்களுக்கு அளவு போடுங்கள்!

வீட்டின் அகலம் நீளமும் உங்கள் ராசி எண்களைப் பொருந்தி இருக்கட்டும்!

கழிவறை அருகில்-சாக்கடை ஓடும் பக்கம் சமையறை கட்டிவிடாதீர்கள். முன் வாசலில் கிணறு வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்!

முன்வாசலை ஒட்டி-தூரமாக-மதில் சுவரருகில் சிறிய உங்கள் இஷ்ட தெய்வம் கோயில் கட்டிப் பிரார்த்தனை செய்யுங்கள். பத்து லட்சத்துக்கு வீடுகட்டினால் பத்தாயிரம் செலவு செய்து ஒரு கோயிலைக் கட்டுவது கஷ்டமானதல்ல உணருங்கள்!

அதிகாலை-எழுந்ததும் குளிக்க-காலைக்கடன் முடிக்கச் செல்லுங்கள். குளிக்காமல்-வாய்கழுவாமல் காபி-பால் குடிப்பது தரித்திரம் என்பதை உணருங்கள்! நாளிதழ் படிப்பதற்குமுன் கடவுளைப் பிரார்த்தனை செய்யுங்கள்.

பிள்ளைகளைக் கட்டுப்பாட்டுடன் வளர்த்து சமுதாயத்திற்கு நல்லது செய்யுங்கள்? செல்லம் என்ற

பெயரில் பாசம் காட்டி அவர்கள்-குழந்தைகள் கெட்டுப்போகும் அளவில் அவர்களைத் கண்டிக்காது விட்டுவிடாதீர்கள்! அவர்களை சமதாயத்தின் சிறந்த பிரஜைகளாக உருவாக்கச் சிரத்தை எடுத்துக் கொள்ளுங்கள்!

சிறுகோபம், சிடுசிடுப்பு, சந்தேகம் வளர்த்துக் கொள்ளதீர்கள்! எல்லாம் விதிப்படி நடக்கிறது-இறைவன் சித்தப்படி நடக்கிறது-என்பதை நினைவில் கொண்டு-இந்த உலக வாழ்க்கை நிலையானதல்ல-ஏதோ கடனை-முன்வினைப்படி ஆற்ற வந்திருக்கிறோம்! என்ற நினைவோடு கடமையாற்றி வாருங்கள்.

ஓடிஓடி உழைத்தாலும் ஒன்றுமில்லை சொந்தம்-இந்த உலகத்தின் இரவல் பொருள் நாம்-என்று அடிக்கடி நினைத்துப் பார்த்து-இறைவன் பேரருள் பெற்று-நீங்கள் சீருடன் வாழ்க.

## ஜெய் ஸ்ரீ குருமகராஜ் கீ ஜெய்

# ஆஸ்ரமத்தை மாற்றி அமைக்க உதவுங்கள்

அன்னை ஸ்ரீ சாரதா அனாதை இடம் அமைந்துள்ள இருளிப்பட்டு கிராமத்தில் அடுத்தடுத்து தொழிற் சாலைகள் வந்த வண்ணம் உள்ளன. அனாதை இல்லத்துக்கு மிக அருகில் ஸ்ரீ வெங்கடாசல பேப்பர்மில் என்ற பெயரில் ஒரு பெரிய தொழிற்சாலை நடந்து வருகிறது. இதன் கழிவு நீரைத் தரையிலேயே கொட்டி வருகிறார்கள். இதனால் நமது ஆஸ்ரமத்திலுள்ள குடிநீர் கெட்டுவிட்டது. தண்ணீர் வெளியிலிருந்து வரவைக்கிறோம். தண்ணீர் போதவில்லை ஆகவே-

ஆஸ்ரமத்தை மாற்றியமைக்கும் எண்ணத்தில் காரனோடை மெயின் ரோட்டில் இடம் தேர்வு செய்து கொண்டிருக்கிறோம்-இதை வாங்கி-கட்டி முடிக்க சுமார் 50 லட்சம் ரூபாய் தேவைப்படுகிறது! இந்த தெய்வ காரியத்திற்கு உங்களால் முடிந்த நன்கொடைகளை வழங்கி-உதவ வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

நீங்கள் தரும் நன்கொடைக்கு **80G No. DIT(E) No.2 (509) 99-2000 Dt. 7-03-2001** விதிப்படி வரிவிலக்கு உண்டு என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். உங்கள் காசோலை-டி.டி. நன்கொடைகளை-அன்னை ஸ்ரீ சாரதா அனாதை இல்லம் என்ற பெயர்க்கே அனுப்பி உதவும்படிக் கேட்டுக்கொள்கிறோம். வணக்கம்.

இறைவன் தொண்டில்

**சுவாமி அமுதானந்த தவயோகி**

நிர்வாகி : அன்னை ஸ்ரீ சாரதா அனாதை இல்லம்

இருளிப்பட்டு, சென்னை - 67.

காரனோடைபாலம் அருகில்